# குமரகுருபரன்



மலர் 13]    பிலவ-ஹூ பங்குனி-மீ 1ம்-உ    (14-3-62)    [இதழ் 3

தனிப் பிரதி 13 நயா பைசா    வருடச் சந்தா ரூ. 1½

## ஆசிரியர் குழு

1. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A.,
சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர்,
காசிச் சர்வகலாசாலை, காசி.

2. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L.,
பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.

3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர், தென்காசி.

5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
(Verification Officer) இந்து அறநிலைய இலாகா,
20, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை - 6.

6. திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள் M. A.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம், காசி.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.


## உள்ளுறை

பக்கம்

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 13 | பிலவ-ஞு பங்குனித் திங்கள் 1-ம்வ [14-3-62] | இதழ் 3

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்

[ கட்டுரை 55 ]

தமிழகத்தில் எங்கும் கோயில் இருக்கக் காண்கின்றோம். கோயிலில் ஏதேனும் ஒரு விக்கிரகம் இருத்தல் கூடும். சுவாமியோ தேவியோ வேறு தெய்வமோ இல்லாத பாழ்ங் கட்டிடத்தையும் பார்க்கின்றோம். அவற்றில் நம் ஆராய்ச்சி இல்லை. தெய்வச்சிலை ஏதேனும் உள்ள கோயிலைக் குறித்ததே நம் ஆராய்ச்சி.

கோயில்களில் அநேக விக்கிரகங்களுக்கு அபயாஸ்தம் வரதாஸ்தம் இருக்கப் பார்க்கின்றோம். அபயம் கொடுக்கும் கை அபயாஸ்தம். வரம் அருளும் கை வரதாஸ்தம். பயம்–அச்சம். அபயம்-அச்சம் இன்மை. அச்சம் இல்லாது காப்பது

எத்தெய்வத்திற்கு உண்டோ? அத்தெய்வத்திற்கு அபயாஸ்தம் இருப்பது பொருத்தம். எத்தெய்வத்திற்குத் தன்னை வணங்கினர்க்கு வரம் அருளும் ஆற்றல் உண்டோ அத்தெய்வம் வரதாஸ்தம் உடையதாதல் தக்கதாகும். தன் பயத்தைத் தானே போக்கிக் கொள்ள மாட்டாமல், பிறிதொன்ருல் போக்கும் நிலையில் இருக்கும் தெய்வம் அபயாஸ்தம் கொள்ளல் எவ்வாறு பொருந்தும்? தான் பிறிதொரு தெய்வத்தின் பால் வரம் கேட்டுக் கொண்டிருக்கும் நிலையுடைய தொன்று, தன்உருவில் வரதாஸ்தம் கொண்டிருத்தல் தக்கதோ?

பாற்கடலைக் கடைந்த காலத்தில், தேவர்களுள்ளும் அசுரர்களுள்ளும் அதில் தோன்றிய நஞ்சினை அஞ்சி ஓடாமல் எஞ்சினேர் எவரும் இலர். நஞ்சச்சம் நெஞ்சச்சம் ஆயிற்று. அதுவே உயிரச்சம் ஆகமாறிற்று. தம் உயிரைக் காத்துக் கொள்ளும் ஆற்றல் இல்லாதவர்க்கே அச்சம் தோன்றும். அச்சம் நீங்கத் தானே பிறர் துணையை வேண்டின், தான் போய்ப் பிறர்க்குண்டான அச்சத்தைத் தீர்த்தல் எவ்வாறு இயலும்? தனக்கே பிறர்வரம் கொடுக்கப் பெறும் நிலை இருப்பதால், பிறர்க்குத் தான்வரம் கொடுத்தல் எங்ஙனம் கூடும்? அந்நஞ்சின் எழுச்சி நெஞ்சின் எழுச்சியை அடக்கிப், பஞ்சின் மெலிந்தோடச் செய்தது; தேவர்களையும் அசுரர்களையும் எல்லாத் தேவர்களையும் அச்சுறுத்தியது அந்நஞ்சு. அஞ்சிய அனைவர்க்கும் உயிர்ப்பிச்சை உதவியருளியவன் திருநீலகண்டப் பெருமானே. அவனுக்கே அபயாஸ்தமும் உரியது. வரதாஸ்தமும் உரியது.

'வானவரும் இந்திரனும் மாலும்அய னும்செத்துப்
போனஇடம் புல்முளைத்துப் போகாதோ? – தானமுதா
அத்தர் அருணேசர் அன்பாக நஞ்சேந்திப்
புத்தமுதா உண்ணுதை போது'

'மாயிரு ஞாலத்து மன்னுயிர்கள் கண்களிப்ப மன்றுளாடும்
நாயகன் கண்டம் கறுத்துஅன்றே பொன்னுலகை நல்கிற்றுஅம்மா
நாயகன் கண்டம் கருதேல்அந் நாட்டமரர்
சேயிழை மாதர்க்குச் செங்கைகளும் கொங்கைகளும் சிவக்கும்போலும்'

என்று (49) முன்னரும் அறிந்துகொண்ட உண்மையே இது.

சிவத்துரோகிகளாய்த் தக்கனது வேள்வியில் அளித்த ஆட்டைத் தின்றும், பாற்கடல் அளித்த நஞ்சை அஞ்சி சிவ பிரானை வேண்டியிரந்து உயிர் பிழைத்த தேவர் கூட்டத்துட் பட்ட அவரையும் எம்பிரானோடு சேர்த்து மூவர் (திரிமூர்த்தி) என எண்ணுவது மகாபாவம் என்று உபதேசித்தருளினர் மாணிக்கவாசகர்.

'சாவமுன்னுள் தக்கன் வேள்வித் தகர்தின்றும் நஞ்சம் அஞ்சி
ஆவஎந்தாய் என்று அவிதா இடும்நம்மவர் அவரே
மூவர் என்றே எம்பிரானொடும் எண்ணிவின்ணுண்டு மண்மேல்
தேவர் என்றே இறுமாந்து என்னபாவம் திரித(ர்)வரே'

என்னும் திருவாசகத்தை உணர்தல் வேண்டும்.

மதுரைத் திருவாலவாய்ச் சோமசுந்தரப் பெருமானுக்கும் அங்கயற் கண்ணியம்மையார்க்கும் திருமணம் நிகழ் காலையில், அப்பிரானது அலங்காரச் செயலில் திருக்கழுத்தில் உருத்தி ராக்கமாலையைச் சார்த்தியதன் வருணனையில் ஆசிரியர் பரஞ் சோதிமுனிவர்,

'மருண்ட தேவரைப் பரம்என மதிப்பவர்
மையல்வல்லிருள் மான
இருண்ட கண்டமேல் முழுமதி கோத்தென
இணைத்தகண்டிகை சாத்தி'

என்று அழகுறப் பாடினர்.

அதனால், என்ன விளங்குகின்றது? பரமேசுவரனைப் பரம் என மதிப்பதுவே உண்மை மதிப்பு. பரத்துவம் இல்லாதவர் என எத்தனையோ வகையால் மற்றையோரை அறிந்துவைத்தும் பரம் எனமதிப்பது போலி மதிப்பு அன்றி மெய்ம்மதிப்பு ஆகாது. நஞ்சுகண்டு அஞ்சி ஓடிய தேவர்களைப் பரம் என மதித்தல் அறிவுடைமை ஆமோ? அத்தேவர்க்கும் அபயாஸ்தம் வரதாஸ்தம் அமைந்த உருவம் பொருந்துமோ? அவர்களுள் தம் அபயக் கையால் தமக்குற்ற பயத்தைத் தீர்த்துக் கொண்டார் எவரேனும் உளரோ? தம் வரதக்கையால் தங்கட்கு வேண்டிய வரத்தை ஆக்கிக் கொண்டார் உளரோ? எவரேனும் இறவாமல்

நின்றனரோ? எவன் இறவானே அவனே பிறவாதவன். நஞ்சுண்டும் சாவாதவன் திருநீலகண்டன் ஒருவனே பிறவாயாக்கைப் பெரியோன் என்று உண்மையுணர்ந்தோர், அன்றே முழங்கினர். இன்றும் அதன் உண்மை போற்றப்படுகின்றது.

'நூறுகோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர்
ஈறலாதவன் ஈசன் ஒருவனே'

என்னும் சொல் வேந்தர் நல்வாய்மையைத்தான் இளங்கோவடிகளும் தம்பொருள் முதுவாக்கில்,

'விண்ணோர் அமுதுஉண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சுஉண்டு இருந்தருள் செய்குவாய்'

என்று நயம் பொருந்தக் கூறியருளினர். அவன் அன்றி அபயம் அருள வேறு எவனுக்கு வாய் உண்டு? இங்கு 'உண்ணாத நஞ்சு' என்றது 'உண்ணற்கு அரிய நஞ்சை உண்டு ஒருதோழம் தேவர் விண்ணிற் பொலிய அமுதம் அளித்த விடைசேர் கொடியண்ணல்' (திருமுறை. 1. 74. 7) என்பதில் உள்ளவாறு பொருள் கொள்ளல் வேண்டும்.

திருநாவுக்கரசு நாயனர், மடநெஞ்சமே என்று விளித்தருளினர். ஒரு வினவை நிகழ்த்தினர். அதுதான் இது:–

'பொங்கிநின் றெழுந்த கடல் நஞ்சினைப்
பங்கி உண்டதோர் தெய்வம் உண்டோ? சொலாய்!
தொங்கிநீ என்றும் சோற்றுத் துறையார்க்குத்
தங்கிநீ பணிசெய் மடநெஞ்சமே'.

அப்பெருமானர் திருவாக்கில், சிவபரஞ்சுடரே அபயாஸ்தம் விரதாஸ்தம் இரண்டும் உடையவனுதற்கு உரியவன். ஏனையோர் அவன் திருவருள் சிறிது பெற்று, அவ்வளவில் பிறர்க்கு அபயமோ வரமோ இரண்டுமோ கொடுத்தலுறலாம் என்னும் உண்மையை,

'வடங்கெழு மலைமத் தாக வானவர் அசுர ரோடு
கடைந்திட எழுந்த நஞ்சம் கண்டுபல் தேவர் அஞ்சி
அடைந்துநும் சரணம் என்ன அருள்பெரி துடையர்ஆகித்
தடங்கடல் நஞ்சம் உண்டார் சாய்க்காடு மேவி னரே!

என்னும் திருநேரிசையில் குறிப்பாகப் பெறவைத்து, நம்பிரான் ஒருவனே அவ்விரண்டும் என்றும் உடையன் என்று விளக்கி யருளினர். அருள் பெரிதுடையரானது வரமும் நஞ்சமுண்டது அபயமும் அளித்தவாறுணர்த்தும்.

மன்றுடும் மாமணியை நஞ்சுண் ணச்செய்து தாம் வாழ்ந்த காரணத்தால், கடல்கடைய அஞ்சாத கூட்டத்தாரை 'வஞ்சகர் கள்' என்னும் பட்டம் சூட்டி ஒருவாறு அமைதி உற்றார் வன்றெண்டப் பெருமான்.

"வங்கம் மேவிய வேலைநஞ்செழ வஞ்சகர்கள் கூடித்
தங்கள்மேல் அடராமை உன்என உண்டு இருள்கண்டன்
அங்கம்ஓதிய ஆனைக்காவுடை ஆதியை நாளும்
எங்கள்ஈசன் என்பார்கள் எம்மையும் ஆளுடையாரே"

இதன் முடிவடியை உளங் கொண்டார் சைவசித்தாந்த முத்தி முடிவடையத் தவருர்.

வஞ்சகர்கள் ஏய்க்க, நஞ்சணி கண்டன் ஏமாந்தனனே என வினவலாம். அதற்கு இடம் இல்லாதவாறு நாவலர் கோமானர் ஆகிய நம்பியாரூரர் நாம் நம்பிய திறத்திற் சிறிதும் குறைவுருதவாறு, அருளிய திறத்தை நோக்குமின்கள் புண்ணியர்களே!.

"கோலமால் வரை மத்தென நாட்டிக்
கோலராவு சுற்றிக் கடைந் தெழுந்த
ஆலநஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர்கட் கருள் புரிவது கருதி
நீலமார் கடல் விடந்தனை யுண்டு
கண்டத்தே வைத்த பித்த! நீ செய்த
சீலம் கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும் பொழிற்றிருப் புன்கூருளானே."

இதில் ஏமனுக்கு அந்தத்தை (முடிவை)ச் செய்த ஏமாந்த சோணகிரி ஏமாந்த பேர்வழி அல்லன். 'பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்'என்று திருவள்ளுவர் குறித்த கண்ணோட்டம், சிவபிரானுடைய முக்கண்ணோட்டத்தின் பல பல கோடியுள் ஒரு கண்ணோட்டமே அன்றி வேறில்லை. "இது சிவபரஞ்சுடரது சீலமே" என்று நாம் அறிய, உலகறிய அருமைக் கருத்தைப் பெருமைக்கு ஒரு குறைவும் இன்றி வெளி யிட்டருளிய 'நயத்துக்குச் சுந்தரனுர்' அல்லாமல் வேறு யாவர் உளர்? இதை 'அமரர் தொழுதேத்துஞ் சீலம்" என்றும் அக் குருநாதர் திருக்கச்சியேகம்பத்தில் அருளினுர்.

இதுகாறும் அபயம் அளித்தருள உரிய பெரும் பொருள் சிவபரஞ்சுடரே என்பது எல்லார்க்கும் தெளிவுறுத்தப்பட்டது. வரம் அளித்தற்கும் அதுவே முற்றும் உரியது என்புதை ஓர் எடுத்துக் காட்டால் குறித்து, அதை விளக்கி நின்ற நூற் பாட்டில் நோக்கம் வைப்பாம்.

திரிபுராரியின் இருபதமலரையும் திருமுடியையும் தரிசிக்க வேண்டி, நெறியல்லா நெறியால் மாலுமிருவரும் தேடிவருந் தினர். நெறியாவது:- தாமரை (த்திருவடி)யை அன்னப்புள்ளும் காட்டை(திருச்சடைக்காட்டை)ப் பன்றியும் நாடல் வேண்டுவது. அவ்வாறு தேடாமல் தமது அகந்தையால் மாறுபட்டுப் பன்றி தாமரையும் அன்னம் காடுமாகப் படர்ந்துதேடுதலால் அடிமுடி காணுமை எய்தினர். பன்றியுருக்கொண்டு நின்று நிலம் பிளந்து, நிமலன் திருவடிக்கு அன்பு நிறைந்த உள்ளம் செலுத்தி, எந்தையே சிந்தை இரங்கு என இரந்தான் மாவலிபால் மூவடி இரந்தான். தன் இரண்டு திருவடிகளையும் தொழுதற்கு எனக்கு இரண்டு கைகளைத் தந்த இறைவன் சிறிது திருவுள்ளம் இரங்கி னுன். ஒரு திருவடியைக் காட்டினுன். மற்றொரு திருவடியையும் காட்டியருள் என்று சிதம்பரத்தில் வரங்கிடந்தான் வைகுந்த நாயகன்.

" புரங்கடந் தான்அடி காண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந் தாய்என் றிரப்பத்தன் ஈரடிக் கென்இரண்டு
கரங்கள்தந் தான்ஒன்று காட்டமற் றுங்கதும் காட்டி என்று
வரங்கிடந் தான்தில்லையம்பல முன்றில்அம் மாயவனே."

என்று திருக்கோவையாரில் உள்ளதை உணர்ந்தும் உபதேச காண்டத்தில் 'வரம் பெறு' படலத்தைக் கண்டும் அறியலாம்.

பிரம விஷ்ணுகளுக்கே அபயமும் விரதமும் உபசாரம் எனின் ஏனையோர் திறத்தில் அவற்றுல் என்ன பயன் உண்டாகும் அவரை வழிபடுவோர்க்கு? சித்திரப்பதுமைகளைப் போலச் செயலில்லாமல் காட்சிக்கு மட்டும் அபயம் வரதம் உடையனவே ஏனைத் தெய்வருபங்கள். சிவபரஞ்சுடர் ஒன்றே அபயம் அருளவும் வரம் அருளவும் வல்லது. அத்தனிமுதற்கே அவை இரண்டும் உண்மையில் உரியன.

"அற்புத மணிமன்றில் அடிகள்நின் அடிஉன்னுர்
மைக்கடல் விடம்என்னும் வடவைத்தீ எழ அஞ்சி
நொ என அடிவீழ்ந்தார்க்கு உதவிலர் நாணுர் கொல்
கைத்தல அபயத்தர் வரதத்தர் கைசெய்யாச்
சித்திரம் அன்ன சிலர்" (சிதம்பரச்செய்யுட்கோவை-61)

[குறிப்புரை :- மணிமன்று-கனகசபை. அடிகள்-சுவாமி. உன்னுர்-தியானம்புரியாதவர். மை-கருமை. வடவைத்தீ-குதிரை முகநெருப்பு. நொ-வருந்து. கைசெய்யா-கையால் இயற்றப் படாத.]

(தொடரும்)

---


## திருக்கோவையார் புதிய பதிப்பு



(பேராசிரியர் உரையும் பழைய உரையும் கூடியது)

784 பக்கம் வெள்ளைத்தாள். அடக்கவிலை

தனிப்பிரதி விலை ரூ. 2-90

( தபால் கட்டணம் வேறு )

ஒரே சமயத்தில் 20 பிரதிகளுக்கு மேல் பெறுவோருக்கு

20% கமிஷன் உண்டு



திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

★

[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

உயர்திரு. டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்து

ஐயரவர்களின் பிறந்த நாட் கொண்டாட்டத்தில்

அந்நூல் நிலையத்து லைப்ரேரியன்

இ. எஸ். வரதராஜய்யர் B. A., பாடிய

# வாழ்த்து

தெய்வத் தமிழின் திறம் தெரிந்து
திறலார் அறிஞர் பால் நன்னூல்
ஐயம்திரிபு கள்ளறவே
யறிந்து பல்லோர்க் கறிவுறுத்து
மையில் சுவடி திருத்தி யச்சில்
வரவே புரிந்த நல்லறிஞன்
துய்யன் சாமி நாதனவன்
தொண்டைப் புகழ்ந்து வாழ்த்துவமே. 1

உத்தமதா னத்துதித்தோன் உத்தமதா னம்மெனவே வுலகோர் போற்றும்
முத்தமிழின் நன்கொடையே பல்லோர்க்கு முவந்தளித்து முயன்று நல்ல
சித்தமுடன் ஏடுபல வாராய்ந்து பன்னூலச் சிட்டுத் தந்த
வித்தகனுர் மாமகோ பாத்யாய னெனப் புடவி மெச்சு வோனே. 2

எண்ணைந்து கவிதையொரு நாழிகையில் இயற்றவலான் எனப்பார் போற்
கண்ணியனும் மீனுட்சி சுந்தரன்பால் பன்னூல்கள் கவினக் கற்று [றும்
மண்ணிலுயர் புகழ்மருவிப் பன்னூல்கள் அச்சேற்றி மகிழத் தந்த
புண்ணியனை யுயர் சாமி நாதனெனும் பண்டிதனைப் புகழு வோமே. 3

பாலாழி தனைக்கடைந்து பாலமுதம் சுரர்க்கீந்தான் பாவை மார்பன்
நூலாழி தனைமதித்துப் பனுவல்பூ சுரர்க் கீந்தான் நுணங்கு கேள்வி
யாலான கல்விமிக்கோன் உரைகளுடன் உரைநடைகள் ஆக்கி நின்றேன்
மேலான பண்பனுயர் சாமிநா தன்புலவாள் வீர னம்மா 4

பொருவில் கவிஞன் சிரபுரத்தன்
புலவர்க் கிறைவன் புகழ்சைவத்
திருவன் சுகுணன் மீனுட்சி
சுந்தரன்பால் தீந்தமிழ்நூல்

மருவிக் கற்றேன் பலர்க்கூட்டி
மகிழ்ந்து பன்னூல் நன்கனமர்
சுருவிற் றந்து புகழ்கொண்டோன்
சாமி நாத வந்தனனே. 5

கன்னித் தமிழ்த்தாய்க் குறைப்பதெனக்
கையிற் கங்க ணம்தரித்தே
பன்னும் பனுவற் கடல்புக்குப்
பலமா மணிகள் தமைத்திரட்டி
நன்னர்த் துலக்கித் தண்டமிழோர்
தங்கட் களித்து நானிலத்து
மன்னும் புகழ் கொண்டுயர்ந்தவன் காண்
சாமிநாத மறையவனே. 6

ஓலும் சிலம்பும் மேகலையும்
ஒளியா ருஞ்சிந் தாமணியும்
பாவின் இனிக்கும் குறுந்தொகையும்
பத்துப் பாட்டும் பெருங்கதையும்
ஞாலம் புகழத் தந்துதவி
நலஞ்சேர் புகழை மருவிய நற்
சீலன் சாமி நாதனவன்
சிறந்த தொண்டைப் போற்றுவமே. 7

அந்நாள் கடைந்து பாற்கடலை
யமரர்க் கமுதம் அரியீந்தான்
இந்நாள் பனுவற் கடல் கடைந்திட்
டினிய மணிகள் புவிக்கீந்தான்
நன்றுன் மறையோன் உயர்சாமி
நாதன் என்போன் தன்செயலால்
மன்ற வுலகில் மன்று புகழ்
மருவி நின்ற வள்ளியனே.

மூக்குக்கண் ணுடியும் ஞானம் முதிர்ந்த முகப்பொலிவும்
ஆக்கையில் பூணு முருத்திராக்கம் நீறெடு கண்டிகையும்
தூக்கும் பனுவலும் ஏடெழுத்தாணி துதைகரமும்
சேக்கும் புகழ்ச்சியும்கொள் சாமிநாத சிகாமணியே. 9

# கூத்தப்பெருமானும் குமரகுருபரரும்

திரு. A. C. சண்முகநயினர் அவர்கள் பி. ஏ. பி. எல்.
திருக்குற்றால தேவஸ்தான தர்மகர்த்தர் குழு முன்னுள் தலைவர்,
தென்காசி.



மலர் 13, இதழ்-2 பக்கம் 126-ன் தொடர்ச்சி.

கூத்தப் பெருமான் திரு உருவம் மார்கழி மாதத்தில் வானத்தில் தோன்றும் திருவாதிரை நட்சத்திரக் கூட்டத்தின் உருவம்போல் ,என்பர் சிலர். மார்கழி மாதத்தில் தான் இந்த நட்சத்திரக் கூட்டத்தைப் பார்க்கலாம். மத்தியில் திருவாதிரை நட்சத்திரம் பிரகாசமாய்த் தோன்றும். சில நட்சத்திரங்கள் இதைச் சுற்றியிருக்கும். இவற்றை மிகவும் நுண்மையாய்ப் பார்க்கக் கூத்தப்பெருமான் திருமுகத்தைப் போலவும் அவன் ஒரு காலை ஊன்றி ஒரு காலைத் தூக்கி நடனமாடுவது போலவும் தோற்றமளிக்கும். இக்கூட்டத்தின் தோற்றத்தை வைத்தே நடராஜப் பெருமான் திருஉருவம் அமைக்கப்பெற்ற தென்று இவர்களுடைய கொள்கை. திருவாதிரை நட்சத்திரம் மிகப் பெரிதாயும் மிகப் பிரகாசமுள்ளதாயுமிருப்பதால் இறைவனுக்கும் அந்த நட்சத்திரத்திரள் பெயரையே சூட்டினர் என்பர். 'ஆதிரையான்' என்று திருமுறைகளிற் குறிக்கப்படுவதினுல் இதை அறியலாம். மக்கள் எந்த உருவத்தில் இறைவனை வணங்குகின்ருர்களோ அவ்வுருவத்தில் இறைவனும் காட்சி கொடுத்து அருள் புரிகின்ருன் என்பது பரந்த நோக்குடைய சைவசித்தாந்த சமயத்தின் துணிபு.

"யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனுர் தாம் வருவர்"

என்று சிவஞான சித்தியாரிற் கூறப்படுகின்றது.

"ஆரொருவ ருள்குவார் உள்ளத்துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்"

என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு.

ஆகலின் திருவாதிரை நட்சத்திரக் கூட்டத்தில் ஆதிரை யான் திருஉருவைக் கண்டவர் திருவருள் நிரம்பிய ஓர் கலைஞன் என்பதற்கு ஐயமில்லை.

கடவுளே நம்மைச் சிருட்டிக்க நாம் தான் கடவுளைச் சிருட்டிக்கின்றோம் என்றுகூடச் சொல்லத் தோன்றுகிறது. கூத்தப்பெருமான் திருஉருவம் அவ்வளவு அற்புதமாய்த் திகழ் கின்றது.

குமரகுருபரர் கூத்தப்பெருமானின் தரிசனத்தின் பெருமையை நன்ருக விளக்குகின்ருர். குமரகுருபரரைவிடத் தவ வலிமைமிக்குடையார் யார்? பல தவப் பெருந்தொண்டர் சலியாது உழைத்துப் பிறவா நன்னெறி பெற்றனர். ஆனல் நானே இவர்களைப்போலல்லாமல் அம்பலதரிசனத்தாலே அந்நெறி பெற்றேன் என்று தான்பெற்ற பேற்றை நினைந்து தொண்டர்கள் பெருமையையும் கூத்தப்பெருமான் தரிசனத்தின் அருமையையும் புகழ் கின்ருர்.

“சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்
பலநா ளோதிக் கலைமுற்று நிரம்பி
அளவையி னளந்துகொண் டுத்தியிற் றெளிந்து
செம்பொரு ளிதுவெனத் தேறி யம்பலத்
தாரா அன்பினே டகனமர்ந் திறைஞ்சிப்
பேரா வியற்கை பெற்றனர் யானே
சரியையிற் சரியாது கிரியையிற் றளராது
யோகத் துணங்கா தொண்பொருள் தூக்காது
வறிதே நின்றிரு மன்ற நோக்கிப்
பிறவா நன்னெறி பெற்ற னன்”

என்று பெருமை கொள்கின்ருர்.

தவப்பெருந் தொண்டரும் தவமில்லாத யானும் பெற்ற பேறு ஒன்றேயன்றி வேறுபாடில்லையென்ற இரண்டு உவமைகள் கூறுகின்ருர். கருநிறமுடைய காக்கையும் பொன்னிறப் புறவும் இமயமலையைச் சார்ந்தால் இரண்டும் பெறுவது ஒரு நிறமே. அதேபோல் தவத்தொண்டர்களும் தவமில்லா யானும் பெற்றது ஒரேவித இன்பமே.

"பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையும்
மன்னுமா லிமய வரைப்புறஞ் சேர்ந்துழி
இருநிறப் பறவைக்கு மொருநிற னல்லதை
நிறம்வேறு தெரிப்ப துண்டோ? இறைவநின்
இன்னருள் பழுத்த சந்நிதி சேர்ந்துழி
இருவேம் பெற்றதும் ஒருபே ருகலின்
வேற்றுமை யுளதோ? இல்லை
ஆற்றல்சால் சிறப்பின் அனையரோ டெனக்கே"

அமிர்தத்தை யுண்ட யாவராயினும் அமரர்களாகின்றனர். அதே போல் நின் தரிசனமாகிய அமிர்தத்தை உண்டயானும் அமரனு னேன்.

"......தொண்டு செய்யாவெனக்குஞ் சிற்றம்பலத்தெம்
காருண்ட கண்டனைக்கண்ட னனுலக் கடலமுதம்
ஆருண்டனர் மற்றவர் எவரேனும் அமரர்களே"

கூத்தப்பெருமான் இடதுகாலைத் தூக்கியாடுகின்றுன். இடதுகாலே அருள் புரியுந் திருவடி. அமைத்த திருக்கரம் இவ்வடியையே காட்டுகின்றது. வலது திருவடி மறைத்தற் றெழிலைச் செய்வது. இடது திருவடி தமது வாமபாகத்தி லுள்ள தேவியின் திருவடி. இறைவன் திருவருளைத் தேவியின் மூலமே பெறவேண்டும். ஆகையினுலேதான் திருமாலுக்கு இடது திருவடியை மட்டும் காட்டினையோ? அதனுலேதான் அத்திருமாலும் அகம்நிறைந்திருக்கின்ருனே என்று கேட்கிருர்.

"தக்கனுர்வேள்வி தகர்த்துச் சமர் முடித்த
நக்கனுர் தில்லை நடராசர் – ஒக்கற்
படப்பாயலான் காணப் பைந்தொடிதா ளென்றே
இடப்பா தந்தூக்கிய வாவின்று"

(படப்பாயலான்—படத்தையுடைய பாம்பின் மேல் படுத்திருக் குந்திருமால்) இங்கே மணிவாசகப் பெருமான் திருக்கோவை யாரிலுள்ள திருப்பாட்டையும் ஒத்துப்பார்க்கத் திருமால்பெற்ற பேற்றைக் கூறுவது ஓர் அறிவுவிருந்தாக விளங்கும்.

"புரங்கடந்தா னடிகாண்பான் புவிவிண்டு புக்கறியா
திரங்கிடெந்தா யென்றிரப்பத்தன் னீரடிக்கென்னிரண்டு
கரங்கள்தந்தா ஞென்று காட்ட மற்ருங்கதுங் காட்டிடென்று
வரங்கிடந்தான் தில்லையம்பலமுன் றிலம்மாயவனே"

இவ்விரண்டு பாக்களிலும் நாம் அறிவது திருமால் திருவருள் புரியும் ஒரு திருவடியாகிய இடது திருவடியைக் கண்ட பெருமை பெற்ருர் என்பது.

கூத்தப்பெருமான் திருநடனத்தின் பெருமையைத் திருமால் மூலமே விளக்குகின்ருர். இதனுல் திருமாலும் சிவபக்தர் கூட்டத்தில் தலைவன் என்ற பொருளும் விளங்குகின்றது. நகைச்சுவை கலந்து பாடுவதால் பொருளின் தெளிவும் விளக்கமும் மனதில் நன்ருய்ப் பதிகின்றது. கற்றவர்மட்டுமல்ல கல்லாதவரும் எளிதில் தெரிந்து கொள்ளலாம். கவி இன்பம் பிறக்கின்றது.

திருமால் பத்து அவதாரமெடுத்து அப்பிறவிதோறும் உழன்று இறுதியில் நின் சந்நிதியில் வந்து கூத்தனருகிருந்தும் தன் கண்ணை மூடிக்கொண்டு துயின்ருன்! உன் ஆடலைக்காண அஞ்சியோ? என்ன?

"ஒருபது வகைத்தாம் யோனி தோறுழன்றும்
பெருவரும் பிறப்பின் வேட்கைய ளுகிநின்
சந்நிதி புக்குமத் தாமரைக் கண்ணுன்
துஞ்சினன் றுயிலொரீஇ யெழாஅன்
அஞ்சினன் போலுநின் ளுடல் காண்பதற்கே"

இதைப் படிக்க நமக்குச் சிரிப்புத்தான் வருகிறது. ஆயின் அப்பொருளின் ஆழமென்ன? அது ஒரு வியப்பல்லவா. திருமால் ஆதிசேடனுகிய பாம்பின்மேல்படுத்துஅறிதுயில் கொள்கின்ருன் என்ருல் யோக நித்திரையிலமர்ந்தான் என்பதே பொருள். அதே போல் இங்கும் 'துஞ்சினுன்' என்ருல் யோகநித்திரையிலமர்ந்தான் என்பதைக் குமரகுருபரர் தன்பக்கம் பயன்படுத்திக் கொண்டார். இவர் மயக்கந்தருகின்ற உலக இன்பங்களை விரும்பவில்லை. செல்வமென்பது சிந்தையினிறைவேயென்று

கூறி அருள் பெற்றுய்தற்குரிய அறிவின் செல்வம் அளித்தருள் எனக்கே என்று வேண்டுகின்றார். கொடியும் முரசும் கொற்ற வெண் குடையுமுள்ள பேரரசன் பதவியாற் பயனில்லை. அவன் மனஅமைதி யின்றிக் கவலையில் ஆழ்ந்து கிடப்பான் "Uneasy lies the head that wears the crown". ஒரு நாட்டைத் தனக்கு அடிமைப்படுத்துவான். மற்றொருநாட்டைப் போரில் இழப்பான். வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வந்து கொண்டிருக்கும். உள் நாட்டிற் பலபல விதமாய் அமைதியின்மையும் ஏற்படும். அதனால் அரசன் மனது எப்போதும் துன்பத்திற் கிடமாகும். ஆயின் பாடுபட்டு விறகு விற்றுக் கூலிகொண்டு அரிசிக் கூழையும் இலைக்கறியையும் உண்டு கவலையின்றி மக்களொடும் மனைவியொடும் வாழ்ந்து முயற்சியில்லாதவனை நினைத்துத் தான்மகிழ்கின்றான் ஒருவன். இவனே மாடமாளிகையில் இகபோகங்களை யனுபவிக்கும் அரசனைவிட மேலானவன். அரசனுக்குச் சிந்தையின் நிறைவு இல்லை. ஆகையால் செல்வமென்பது சிந்தையின் நிறைவு என்றதோர் உயர்ந்த பாடத்தை நமக்குக் கற்பிக்கின்றார். பிறவிக் கடலை நீந்த அவா அறுத்தல் வேண்டும் என்று வற்புறுத்துகின்றார்.

கூத்தப் பெருமானிடம் வைத்த பற்றுதல் மிகமிகப் பெரியது. அவர் பெருமையைக் கூறும் நூல்களைத் தேடி இறுதியில் மணிவாசகர் அருளிய திருக்கோவையாரை நினைத்து,

"பைந்தமிழ் நவின்ற செந்நாப்புலவன்
ஐந்திணை யுறுப்பி னற்பொருள் பயக்கும்
காமஞ் சான்ற ஞானப்பனு வற்குப்
பொருளெனக் காட்டிய ஒருபெருஞ் செல்வ"

என்று இறைவனைப் புகழ்ந்து மணிவாசகரை வணங்குகின்றார். சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் விடவில்லை.

"திருத்தொண்டத் தொகைக்கு முதற் பொருளாகி"

என்று கூறி திருத்தொண்டத் தொகையை நினைந்து இவருக்கும் வணக்கம் செலுத்துகின்றார். "ஒரு பெரும் புலவர்" என்ற வாழ்த்து அவருக்காக நள்ளிருளில் இறைவன் பரவை நாச்சியார் வீட்டுக்குத் தூது சென்றதையும் நினைவுறுத்துகின்றார்.

கூத்தப்பெருமானின் திருநடனத்தை ஒருகாற் கும்பிட்டால் போதும். அதுவே கதிகூடும் என்று நமக்கு உபதேசிக்கின்றார்.

"கூடுங்கதி யொருகாற் கும்பிட்டாற் போதுமென
நாடுமவி நயத்தை நண்ணிற்றால் — ஓடியகட்
காதனூர் காண வொருகால் காட்டிக் கையமைத்து
நாதனூர் செய்யு நடம்"

கண்ணையே காதாக உடைய பாம்பாகிய பதஞ்சலி முனிவருக்கு ஒருகால் ஊன்றி ஒருகால் தூக்கி நடஞ்செய்து காட்சியருளியதை இப்பாட்டுக் கூறுகின்றது. முதலடியில் வரும் ஒருகா லென்பது ஒரு முறை யென்றும் ஒருதிருவடி யென்றும் இருபொருள்படும்.

---

## முருகன் செயலே!

ராகம்: ஆனந்தபைரவி தாளம்: ஆதி

பல்லவி

முருகா என்றுந்தன் திருநாமம் சொன்னால்
உருகாதவர் யாரோ திருமுருகா முருகா (முருகா)

அநுபல்லவி

சிங்கார வேலவா திருச்செந்தூர்க் கந்தா
மங்காத புகழொடு மயிலேறும் வடிவேலோய் (முருகா)

சரணம்

ஆறுபடை விடுகொண்ட ஆனந்தக் குமரா
கூறுமடியார் மனதில் குழைந்திடுமால் மருகா
சீருடன் வாழ்ந்து செல்வ மிழந்தபோதும்
மறப்பாருண்டோ உனை மண்மேவும் குருநாதா (முருகா)

அமைப்பு,

கவித்தென்றல், U. R. உமாநாத தீக்ஷிதர்.

# தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான

# திரிபுவனத் தலவரலாறு



கல்வெட்டு ஆராய்ச்சிக் கலைஞர்
வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார் அவர்கள்
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திரிபுரவனம் நடுக்கந் தீர்த்த பெருமான் வணக்கம்

( அறுசீரடி விருத்தம் )

கொடுக்கு மிம்மை மறுமையொடு குறையா
வின்பப் பெருவீடும்
எடுக்கும் பிறவிக் கடனின்றும் இமையோர்க்
கவுணர் திரிபுரங்கள்
அடுக்கும் துன்பத் துடன்மடங்க லாற்று
மாற்ற வொண்ணுத
நடுக்கந் துடைத்த பெருமானுர் நளின
மலர்ப் பொற்ருளிணையே.

குறிப்பு :—

அடுக்குந் துன்பம் = மேன்மேல் விளைத்த துன்பம்
மடங்கல் = நரசிங்கம்
ஆற்றும் = செய்த
ஆற்றவொண்ணுத = பொறுக்க முடியாத

## திரிபுரவனம்

பண்டொரு காலத்தில் அச்சுவக்கிரீவன், விடபக்கிரீவன், வியாளக்கிரீவன் என்ற மூன்று அசுரர்கள் இருந்தனர். அவர்கள் தவமுயன்று பெருவலி உடையராவதன் முன்னமே அவர்களை அழித்துவிட வேண்டும் என்று கருதிய தேவர்கள் சேனை

யோடு சென்று கடும்போர் விளைத்தனர். அஞ்சாது நெடுங் காலம் போர் புரிந்த அசுரர்கள் இனித்தாம் உயிர்தப்ப இயலாது என்று உணர்ந்து மாயையால் மறைந்து மண்ணுலகத்தை அடைந்து மாறுவேடத்தோடு திரிந்தனர். மண்ணுலகத்தில் காடுகளிலும் மலைகளிலும் திரிகின்ற பொழுது வில்வமரங்கள் அடர்ந்த ஒருகாட்டினையும், அதன் நடுவே ஒரு லிங்கத்தையும் கண்டனர். உயிர் பிழைத்தல் அரிதான நிலையிலிருந்த அசுரர்கள் அப்பெருமானிடம் அடைக்கலம் புகுந்தனர். இறைவன் அஞ்ச லென்றருளி அவர்களது நடுக்கத்தை விலக்கி அருளினர்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும்" என்பதை நன்குணர்ந்த அசுரர்கள் இறைவனைக் குறித்து அருந்தவம் ஆற்றினர். அவர்களது தவத்துக்கிரங்கி சிவபெருமான் காட்சியருளி, வேண்டும் வரங்களை வேண்டுமாறு பணித்தருளினர். அசுரர்கள், எம் இறைவனே! "எங்கள் பகை வர்களாகிய அமரரால் அடர்க்கப்பட்டு யாம் பெரிதும் துன் புற்றேம். உயிர்க்கு அஞ்சினேம். எங்கள் அச்சத்தைத் தவிர்த்து தேவரீரே அவர்களை யாங்கள் அடர்க்கும் ஆற்றலும் அருளவேண்டும். ஆதலால் தேவராலும் யாவராலும் அழியாத வையும் பொன், வெள்ளி, இரும்பு என்பவற்றால் தனித்தனி யாகியவையும் எங்கள் விருப்பம் போல் எங்கு வேண்டுமாயினும் உலவித் திரிபவையும் ஆகிய மூன்று கோட்டைகளை எங்களுக்கு அருளவேண்டும்" என்று வேண்டினர். இறைவன் அவ்வாறே அருளினன்.

அருள் பெற்ற அசுரர்கள் அன்று முதலாகத் தேவர் களையும் ஏனையோர்களையும் துன்புறுத்தத் தொடங்கினர். மலரோன், திருமால் முதலிய பெருந்தேவர்களும் அவர்களை எதிர்த்து ஆற்றலழிந்து அடங்கினர். இன்னல் பொறுக்க இயலாது அஞ்சினர்க்கு அரணாகிய அரனரிடம் முற்கூறிய வில்வ வனத்திற் சரண்புகுந்து குறையிரந்து முறைஇட்டனர். சார்ந்தோரைத் தாங்கும் தயாநிதியாகிய சிவபெருமான் அவர் களுக்குப் புகல் அருளித் திரிபுரத்தசுரர்களை அழிக்கப் புறப் பட்டார்.

அது காலை சூரிய சந்திரர்களே சக்கரங்களாகப் பூமியே தேராயமைந்தது. மேருமலையே வில்லாகவும், வாசுகியென்ற பெரும்பாம்பே நாணாகவும் அமைந்தன. திருமால் அம்பாகவும் அக்கினி தேவன் முனையாகவும் வாயுதேவன் இறகாகவும் அமர்ந்தனர். இத்தகைய போர்த்துணைகளோடு இறைவன் புறப்படுங்காலை, தேவர்கள் தாம் இறைவனுக்குப் போர்த்துணை யாய் அமைந்ததைக் கருதிச் செருக்குற்றனர். அவர்கள் செருக்கை அழிக்க இறைவன் கருதினான். தேர்மேல் கால் வைத்தவுடன் அச்சு முறிந்தது. உடனே திருமால் விடை வடி வாய் அன்பொடு தாங்கினான். இறைவன் நகைத்தான். முப் புரமும் அழிந்தன. தேவர்கள் நடுக்கம் ஒழிந்தது. திரிபுரத்து அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுத்து இறைவன் காத்த தாலும், அவ்வசுரர்களால் வந்த துன்பத்தை நீக்கித்தேவர்களைக் காத்ததாலும் வில்வவனம், திரிபுரவனம் என்ற திருப் பெயர் பெற்றது.

## ஸ்ரீ கம்பேசுவரர்

இரணியன், இரணியாக்கன் என்ற இரண்டு அசுரர்கள் அண்ணன் தம்பியர் பிரமனைநோக்கிக் கடுந்தவம் இயற்றி அரிய பெரிய வரங்களைப் பெற்றிருந்தனர். அவர்களில் மூத்தவ னாகிய இரணியன் தேவர், மனிதர், விலங்கு முதலிய யாவரா லும் எத்தகைய ஆயுதத்தாலும் அகம் புறம் என்ற ஈரிடத்திலும், பகலிரவு என்ற இருவேளையிலும் சாகாதவரம் வேண்டும் என்று வேண்டிப் பெற்றான். அதனால் தன்னை எதிர்ப்பாரொருவரு மின்றிப் பெருஞ் செருக்குற்றான். அச்செருக்கு முதிர்ந்து இறுதி யில் தானே பிரமம் என்றும் தன்னையொழிய யாரும் எவரையும் வழிபடலாகாது என்றும் அனைவருக்கும் ஆணையிட்டான். அவ்வாணையைக் கடந்தார் யாவரே யெனினும் அவர்களுக்குக் கடுந்தண்டனையும் இட்டுவந்தான்.

இங்ஙனம் நிகழு நாட்களில் அவனுக்குப் பிரகலாதன் என்றொரு புண்ணியப் புதல்வன் பிறந்தான். அவன் தாய் வயிற்றிலிருக்கும்போதே நாரத முனிவரது உபதேசத்தால் திருமால்பால் பேரன்புடையவனாயினான். பிறந்து மொழி பயின்று பள்ளியில் வைக்கப் பெற்றபோது அவனுடைய ஆசிரியன் 'ஓம் நமோ இரண்யாய' என்று கூறும்படி ஏவினான்.

சிறுவன் அதனை மறுத்து 'ஓம் நமோ நாராயணாய' என்றான். ஆசிரியன் பெரிதும் அஞ்சி அவ்வாறு கூறக்கூடா தென நயத்தாலும் பயத்தாலும் கூறிய கூற்றுக்களை யெல்லாம் மறுத்து வெளிப்படையாகத் திருமாலின் பத்தியுடையவனாக அச்சிறுவன் விளங்கினான். அதனையுணர்ந்த தந்தை இரணியன், சிறுவனை அழைத்துப் பலவிதமாக அச்சுறுத்தியும் சிறுவன் தந்தையின் கருத்துக்கு இணங்கினானல்லன். இரணியன் பெருங் கோபங்கொண்டு பல்லாற்றானும் சிறுவனைக் கொல்ல முயன்றான்.

திருமாலின் அருளால் சிறுவன் இடையூறின்றி விளங்கினான். தன் தீச்சினத்தை அடக்கலாற்றா இரணியன் ஒருநாள் சிறுவனை யழைத்து "ஏடா சிறுவ! நீ சொல்லும் நாராயணன் என்பான் யாண்டுளன்? என் தம்பியைக் கொன்ற அக்கயவன் என் சினத்துக்கு அஞ்சி எங்கோ கரந்து உறைகின்றான்? அவனும் ஒரு தெய்வமா? நியவனை எனக்குக் காட்டு. உன்கண்முன் அவனைக் கொன்று நானே கடவுள் என்பதை உனக்குத் தெரிவிக்கின்றேன்" என்றான். சிறுவன் "தந்தையே! நாராயணன்" தூணிலும் இருக்கின்றான் துரும்பிலும் இருக்கின்றான் என்றான். "எங்கே அவன் தெய்வமானால் இத்தூணிலிருந்து அவன் வெளி வரட்டும்" என்று தூணை எட்டி உதைத்தான். உடனே தூண் பிளந்து திருமால் நரசிம்மவடிவாய் வெளித் தோன்றினார். இரணியன் அடங்காச் சினமுண்டு தன் தம்பியைக் கொன்ற பழிக்குப் பழி வாங்குவதாகக் கூறி எதிர்த்தான். திருமால் அவனைப்பற்றித் தூக்கிச் சென்று வாயிற்படியில் வீற்றிருந்து அவன் வயிற்றைக் கிழித்துக் கொன்றார். அவனது குருதி முழுவதையும் பருகினார்.

நான் பிரமம் என்று பேசிப் பொல்லாங்கு செய்து திரிந்த இரண்யன் மேல் திருமால் கொண்டிருந்த சினத் தீ அவனைக் கொன்ற பின்னும் குறைந்திலது. அவனது குருதியாகிய நெய்யால் கொழுந்து விட்டு வளர்ந்தது. அதனால் திருமால் மயங்கி உலகத்தையே அழிப்பான் தொடங்கினர். இரணியனது குருதியே அதனையுண்ட திருமாலின் மதியை மயக்கி இத்தகைய கொடுமை செய்வித்தது எனின் அவன் எத்தகைய கொடியனா

யிருந்திருப்பான். பிரகலாதனும் திருமகளும் பலவாறு புகழ்ந்து ஆற்றியும் கோபந் தணிந்திலது.

அதனைக் கண்ட பிரமன் முதலிய தேவர்கள் தேவ தேவரா கிய நீலகண்டனிடம் புகலடைந்து முறையிட்டனர். சிவ பெருமான் சரபப்பறவை வடிவுகொண்டு நரசிம்மத்தை நோக்கிச் சென்றூர். சரபத்தினைக் கண்ட நரசிம்மம் அஞ்சியோடத் தொடங்கிற்று. துரத்திச் சென்ற சரபம் தன்மீது பட்ட உடனே நரசிங்கம் தன் கொடுமை அடங்கப் பெற்று அமைதியுற்றது. தன்இயல்பாய நல்லுணர்வைத் திருமால் பெற்றூர். பிரகலாதன், திருமால், தேவர், மனிதர், முதலிய யாவரது பயமும் நீங்கிற்று. தம் தவற்றினை உணர்ந்த திருமாலும் ஏனைய தேவர்களும் சிவ பெருமானைப் புகழ்ந்து பாடி அருள் பெற்றனர். தங்களுக்கு விளைந்த கம்பத்தினை (நடுக்கத்தை, பயத்தை) நீக்கியருளியதால் அத்தலத்திலே சிவபெருமானுக்குக் கம்பஹரேசுவரர் (நடுக்கந் தவிர்த்தபெருமான்) என்ற திருப்பெயர் உண்டாக வேண்டு மென்றும், அங்கே யவரை அடைந்து வணங்கினூரெல்லாரும் நடுக்கந்தீர்ந்து நலமெய்தச் சரபவடிவுடன் வீற்றிருந்தருள வேண்டு மென்றும் வரம் பெற்றனர்.

அதனுல் அத்தலத்தில் சிவபெருமானுக்குக் கம்பஹரேச்சுவரர் என்ற திருப்பெயர் ஏற்பட்டது. சரபமூர்த்தியும் அங்கு வீற் றிருந்து அடைந்தோர்க்கருள் செய்கின்றூர்.

மதுரையை ஆண்ட சிவபத்திச் செல்வனுகிய வரகுண பாண்டியன் சோம சுந்தரப் பெருமானுரின் கட்டளைப்படித் திருவிடைமருதூரடைந்து தன்னைப் பற்றியிருந்த பிரம ஹத்தி நீங்கப்பெற்றுன். எனினும் "மழைபெய்து துவ்வானம் விடாதது" போல பிரமஹத்தியின் அச்சம் நீங்கப்பெற்றிலன். அந்த அச்சம் இத்திரிபுரவனத்தை அடைந்த பின்னரே நீங்கிற்று.

ஆதலால் அன்பர்களே! இவ்விறைவனை யடைவீரேல் "அஞ் சுவதி யாதொன்று மில்லை அஞ்ச வருவதுமில்லை" என்பது தேற்றம்.

"முத்தமிழ் விரகன் மொய்கழல் வெல்க".

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 13, இதழ் 2-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

14. சித்தந்தெளிவிர்கா,ளத்தனாரூரைப்
பத்திமலர்தூவ,முத்தியாகுமே.

15. பிறவியறுப்பீர்கா,ளறவனாரூரை
மறவாதேத்துமின்,றுறவியாகுமே.

16. துன்பந்துடைப்பீர்கா,ளன்பனணியாரூர்
நன்பொன்மலர்தூவ, வின்பமாகுமே.

The next three stanzas are from a hymn written in a very attractive short-lined metre, and promise tlght,freedom from rebirth, and bliss, through devotion io Siva at Arur (now Tiruvallur in the Tanjore District.)

14. For the Father in Arur
Sprinkle ye the blooms of love;
In your heart will dawn true light,
Every bondage will remove.

15. Him the holy in Arur
Ne'er forget to laud and praise;
Bonds of birth will severed be,
Left behind all worldly ways.

16. In Arur, our loved one's gem,
Scatter golden blossoms fair.
Sorrow ye shall wipe away,
Yours be bliss beyond compare.

— (To be Continued)

---

Reproduced with the kind permission of Oxford University Press. Calcutta.

(N.B. Copies available for sale at the above Press.)

# மதுரைக் கலம்பகம் உரைநடை

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த
சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

[மலர் 13. இதழ் 2-ன் தொடர்ச்சி]

தேத்தந்த கொன்றையான் தெய்வத் தமிழ்க்கூடல்
மாத்தந்த வேழ மதமடங்க—மீத்தந்த
மாகவி மானம் வணங்கினமாற் கூற்றெமைவிட்
டேகவி மானமுனக் கேன். 49

தேனைச் சொரிகின்ற கொன்றைப் பூமாலையைச் சூடியவனுகிய சொக்கலிங்கப் பெருமானது தெய்வத் தன்மையையுடைய தமிழ் வழங்குகின்ற கூடலம்பதியிலேயுள்ள பெரிய கொம்புகளையுடைய யானைகளின் மதம் அடங்கும்படி அவற்றின் மேலே பொருந்தியிருக்கின்ற உயர்ந்த விண்ணுலகத்திலிருந்து வந்த இந்திர விமானத்தை வணங்கிஞேம். எமனே! எம்மை விட்டுச் செல்வாயாக. உனக்குச் செருக்கு எதற்காக ?

ஏனின் றிரங்குதி யேழைநெஞ் சேவண் டிமிர்கடப்பங்
கானின் றதுமற்ருேர் கற்பக மேயந்தக் கற்பகத்தின்
பானின்ற பச்சைப் பசுங்கொடி யேமுற்றும் பாலிக்குமால்
தேனின்ற வைந்தருச் சிந்தா மணியொடத் தேனுவுமே. 50

அறியாமை பொருந்திய மனமே? என்ன காரணத்தால் நீ நின்று வருத்தப் படுகின்ருய்? வண்டுகள் ஒலிக்கின்ற கடம்பவனத்தில் ஓர் கற்பகமரம் இருக்கின்றது. அந்தக் கற்பகமரத்தின் பக்கத்திலேயுள்ள பச்சை நிறத்தையுடைய இளங்கொடி

போன்றவளாகிய மீனுட்சியம்மையே, தேன் தங்கிய மலர்களை யுடைய சந்தானம், அரிசந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் ஆகிய ஐந்து தருக்களையும் சிந்தாமணி என்னும் நல் மணியையும் அந்தக் காமதேனுவையும் இன்னும் வேண்டிய எல்லாவற்றையும் அடியார்களுக்குத் தந்தருளும்.

தேன ருதசி லைக்க ரும்புகொ லைக்க ரும்பொரு வேம்பெனும்
தேம்பு யத்தணி வேம்பி னைக்கனி தீங்க ரும்பெனு மிவ்வண
மான ருதம ழைக்க ணங்கையு மாறி யாடத் தொடங்குமான்
மாறி யாடுநின் வல்ல பந்தொழ வந்த பேர்க்கும்வ ருங்கொலோ
கான ருதசு ருப்பு நாண்கொள் கருப்புவில்லியைக் காய்ந்தநாட்
கைப்ப தாகை கவர்ந்து கொண்டதொர் காட்சி யென்னவெ டுப்ப
மீன ருதவ டற்ப தாகைவி டைப்ப தாகையு டன்கொளும் [தோர்
வீர சுந்தர மாற மாறடும் வெள்ளி யம்பல வாணனே. 51

நன்மணத்தை விட்டு நீங்காத வண்டுகளின் ஒழுங்காகிய வில் நாணியைக் கொண்ட கரும்பு வில்லையுடையவனுகிய மன் மதனை எரித்த அந்த நாளிலே அவன் கையிலிருந்து மீனக் கொடியைக் கவர்ந்து கொண்ட ஒரு தன்மையைப் போல உயரத் தூக்குவதாகிய ஒரு மீன் பொறிக்கப்பெற்ற வலிமையான கொடியை விடைக் கொடியோடு கொள்ளுகின்ற வீரம் பொருந் திய சுந்தர பாண்டியனுக வந்தவனே! பகைவர்களை அழிக்கின்ற வெள்ளியம்பலத்தில் வாழ்பவனே!மதுரம்நீங்காதவில்லாகஇருப்ப தற்குப் பொருந்திய கொல்லையில் உண்டாகின்ற கரும்பை ஒரு வேம்பு என்று சொல்லுவாள். சொக்கேசரது அழகிய தோள் களிலே தரித்திருக்கிற வேப்பம் பூ மாலையை முதிர்ந்த இனிப் புள்ள கரும்பு என்று சொல்லுவாள். இவ்வாறு மான்போன்ற பார்வையையுடைய குளிர்ந்த கண்ணினளாகிய இம்மங்கையும் மாறியாடுகின்ருள். மாறியாடுகின்ற உனது வல்லமை உன்னை வணங்குவதற்கு வந்தவர்களுக்கும் வருமோ?

வாணிலாப் பரப்பு மகுடகோ டீர
மறிபுனற் கங்கைநங் கைக்கும்
வையமீன் றளித்த மரகதக் கொடிக்குன்
வாமபா கமும்வழங் கினையால்

பூணுலாங் களபப் புணர்முலை யிவட்குன்
 பொற்புயம் வழங்கலை யெமர்போற்
பொதுவினின் றுய்க்கு நடுவின்மை யிடையே
 புகுந்தவா றென்கொலோ புகலாய்
தூணுலாம் பசும்பொற் றோரண முகப்பிற்
 சூளிகை நெற்றிநின் றிறங்கும்
சுரிமுகக் குடக்கூன் வலம்புரிச் சங்கம்
 தோன்றலு மூன்றுநாள் நிரம்பா
நீணிலா வெனக்கொண் டணங்கனார் வளைக்கை
 நெட்டிதழ்க் கமலங்கள் முகிழ்க்கும்
நீடுநான் மாடக் கூடலிற் பொலியும்
 நிமலனே மதுரைநா யகனே. 52

தூண்கள் பொருந்தி விளங்குகின்ற பசும்பொன்னாலாகிய தோரணங்கள் கட்டப்பெற்ற முன்வாயிலில் மேல் மாடத்தின் உச்சியிலிருந்து இறங்கி வருகின்ற சுழிந்த முகத்தையுடைய குடம்போன்ற முதுகு வளைந்த வலம்புரிச் சங்கம் தோன்றிய அளவில் அதனை மூன்று நாள் நிரம்பாத நீண்ட பிறைத்திங்கள் என எண்ணித் தெய்வ மகளிரை யொத்த பெண்களின் வளையலை அணிந்த கைகளாகிய நீண்ட இதழ்களையுடைய தாமரை மலர்கள் குவிகின்ற நீண்ட நான்மாடக் கூடலென்னும் மதுரை யம்பதியில் எழுந்தருளியுள்ள நிமலனே! மதுரைக்குத் தலைவனே! நில வொளியைப் பரப்புகின்ற திருமுடிச் சடையை அலையையுடைய நீர் நிறைந்த கங்கை நங்கைக்கும் எல்லா வுலகங்களையும் ஈன்றளித்த பச்சைக்கொடி போன்ற உமா தேவிக்கு உனது இடப்பாகத்தையும் வழங்கியருளினாய். ஆபரணங்கள் விளங்குகின்ற கலவைச் சாந்தணிந்த ஒன்றோடொன்று நெருங்கிய கொங்கைகளையுடைய இம்மங்கைக்கு உனது அழகிய தோள்களைக் கொடுத்தருளுகின்றாயில்லை. எம்மவரைப் போல யாவருக்கும் பொதுவாக நின்ற உனக்கு இடையில் நடுவுநிலை இல்லாத தன்மை வந்து சேர்ந்தவிதம் யாதோ? சொல்வாயாக.

மதும லர்க்குழ லாய்பிச்சை யென்றுநம்
 மனைதொ றுந்திரி வார்பிச்சை யிட்டபோ

ததிலோர் பிச்சையுங் கொள்ளார்கொள் கின்றதிங்
கறிவு நாணுநம் மாவியு மேகொலாம்
பதும நாறும் பரிக்கலத் தூற்றிய
பச்சி ரத்தம் பழஞ்சோ றெனிற்பினைப்
புதிய துந்நம் முயிர்ப்பலி யேயன்றோ
பூவை பால்கொள் புழுகுநெய்ச் சொக்கர்க்கே. 53

தேன் நிறைந்த பூக்களைச் சூடிய கூந்தலையுடையவளே! எனக்குப் பிச்சை இடுவாயாக என்று சொல்லிக் கொண்டு நமது வீடுகள் தோறும் அலைவார். பிச்சை போட்ட பொழுது அந்த ஒட்டிலிருந்து ஒருபிச்சையையும் எடுத்துக் கொள்ளுகின்றாரில்லை. இங்கே அவர் வாங்கிக்கொள்வது, நமது அறிவையும் நாணத்தையும் உயிரையுமே போலும்! நாகணவாய்ப் பறவையை ஒத்த உமாதேவியை ஒரு பாகத்திலே கொண்ட புழுகு நெய்யில் ஆடுகின்ற சொக்கேசப் பெருமானுக்குத் தாமரை மலரில் தோன்றிய பிரமனது தலையாகிய பிச்சைப் பாத்திரத்தில் முன்னே சொரிந்த திருமாலின்குருதி பழய உணவென்றால் பின்பு புதிய உணவும் நமது உயிராகிய பிச்சையே அன்றோ?

புழுகுநெய்ச் சொக்க ரபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்கர்
அழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்க ரங்கயற்கண்
தழுவிய சங்கத் தமிழ்ச்சொக்க ரென்றென்று சந்ததநீ
பழகிய சொற்குப் பயன்தேர்ந்து வாவிங்கென் பைங்கிளியே. 54

எனது பசுமையான கிளியே! புழுகு நெய்ச்சொக்கரென்றும் அபிடேகச் சொக்கரென்றும் கர்ப்பூரச் சொக்கரென்றும் அழகிய சொக்கரென்றும், கடம்பவனச் சொக்கரென்றும் அங்கயற் கண்ணம்மை தழுவிய சங்கத் தமிழுக்குரிய சொக்கரென்றும் நாள்தோறும் நீ பழகி வருகின்ற திருநாமங்களுக்குரிய பயனை அப்பெருமானிடத்திற்குச் சென்று தெரிந்து கொண்டு மீண்டு வருவாயாக.

பைந்தமிழ்தேர் கூடற் பழியஞ்சி யார்க்கவமே
வந்ததொரு பெண்பழியென் வாழ்த்துகேன்—அந்தோ
அடியிடுமுன் னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடியிடமாப் போந்த குறை. 55

பசுமையான தமிழாராய்ச்சிக்கு இடமான கூடற் பதியிலே யுள்ள பழியஞ்சியவராகிய சொக்கேசப் பெருமானுக்கு வீணுக ஒரு பெண்பழி வந்து சேர்ந்து விட்டது. இது என்ன? அவருக்கு அப்பழி தீரும்படி வாழ்த்துகின்றேன். ஐயோ! அத்தலைவருக்கு அடியெடுத்து வைப்பதற்கு முன்னே காகம் இடப்புறமாக வந்த குறையினுலே இங்ஙனம் அமைந்தது. கெட்டேன்.

குறுமுகைவெண் டளவளவின் மணந்துவக்குங் காலம்
கொழுநரொடு மிளமகளிர் மணந்துவக்குங் காலம்
மறுகுதொறு நின்றெமர்க ளுருத்திகழுங் காலம்
வரிசிலைகொண் டுருவிலியு முருத்திகழுங் காலம்
சிறுமதிநம் பெருமதியி னுகப்படருங் காலம்
தென்றலிளங் கன்றுமுயி ருகப்படருங் காலம்
நிறையினெடு நாணினெடு மகன்றிரியுங் காலம்
நேசர்மது ரேசர்வரை யகன்றிரியுங் காலம். 56

வெண்மையான முல்லையினது சிறிய அரும்புகள் அளவில் லாத மணத்தை வீசத்தொடங்கின்ற காலமும் இளம்பெண்கள் தங்கள் கொழுநரோடு கூடி மகிழுகின்ற காலமும் எம்மைச் சேர்ந்தவர்கள் என்னிடத்துக் கோபம் கொண்டு தெருக்கள் தோறும் பழி தூற்றுகின்ற காலமும் உருவமில்லாதவனுகிய மன்மதனும் இழுத்துக் கட்டப்பெற்ற வில்லைக்கொண்டு உருவத் தோடு வெளிப்பட்டு விளங்கும் காலமும் பிறைத்திங்கள் நமது பெரிய அறிவினது மகிழ்ச்சியைக் கெடுக்கின்ற காலமும் இளைய தென்றற் காற்றும் எமது உயிர் நீங்கும்படி உலாவுகின்ற காலமும் எம்முடைய மனம் கற்போடும் நாணேடும் மாறுபடு கின்ற காலமும் அன்பராகிய மதுரேசர் இம்மலையை விட்டு நீங்கிச் சென்ற காலமும் இதுவாகும்.

---

(தொடரும்)

உ

சிவமயம்

# நூல்

# சமய ஆசார விளக்க வினாவிடை

திரு. T. சாமிநாத சிவாச்சாரியர் அவர்கள்.

விநாயகர் வணக்கம்

அடியர்இடர் தீர்த்தருளும் ஆனைமுகன் பாதம்
கடிமலர்தூய்க் கைதொழுவாம் கண்டு.

சிவ வணக்கம்

உலகமும் பல்லுயிரும் ஒன்றிநிறைந் தோங்கி
இலகும் சிவன்எம் இறை.

சக்தி வணக்கம்

ஒன்ருகி ஐந்தொழிற்கும் அத்துவிதம் உற்றுயிருள்
நின்ருள்பொற் பாதம்நினை வாம்.

சுப்பிரமணியர் வணக்கம்

அமரர்இடர் தீர்த்தே அவர்க்கருளும் வென்றிக்
குமரன்அடி சிந்திப்பாம் கூர்ந்து.

1. தீக்ஷை என்பது யாது?

'தீ' என்பது ஞானத்தை உண்டாக்குதல் என்னும் பொருள் உடையது.

'க்ஷா' என்பது ஞானத்தால் ஆன்மாக்களுக்கு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் போக்குதல் என்னும் பொருள் உடையது.

எனவே ஞானத்தால் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் போக்குதலே தீக்ஷை எனப்படும். தீக்ஷா என்பது தீக்ஷை என ஆயிற்று.

2. வினு: அந்தம் இல் குருவே! மந்திரம் என்றது என்.

(இ-ள்.) முடிவில்லாத ஆச்சாரியனே! மந்திரம் என்ற சொற்குப் பொருள் யாது?

விடை: மந் - தன்னை நினைப்பவனுக்கு எல்லாவற்றையும் உள்ளபடி அறிவித்து, திரம் - செனன மரணத்து உருமல் காப்பது.

## I அனுட்டானம்

3. வினு: மாசில் குருவே! ஆசமித்து என் பயன்?

(இ-ள்.) ஆணவம் முதலிய குற்றம்இல்லாத ஆசாரியனே! ஆசமனம் செய்ததால் பயன் யாது?

விடை: உளுந்து அமிழ்ந்தும் நீரை முதல் முறை அள்ளி ஆசமனம் செய்தால் ஆன்ம தத்துவமாகிய இருபத்து நான்கும் சுத்தியாவது பயனுகும்.

இரண்டாம் முறை ஆசமனம் செய்தால் வித்தியா தத்துவம் ஏழும் சுத்தியாவது பயன்.

மூன்றும் முறை ஆசமனம் செய்தால் சுத்தவித்தை முதல் மூன்றும் சுத்தியாவது பயன்.

இவ்வாறு தத்துவங்கள் சுத்தியாதற் பொருட்டு ஆசமனம் பண்ண வேண்டுவது. இதுவன்றியும் இந்த ஆசமனங்களாலே இருக்கு முதலிய வேதம் மூன்றிற்கும் பிரீதியாம்.

4. வினு: திட்டமாப் பின்னைத் தொடும் இடம் தொட்டது என்?

(இ-ள்.) உறுதியாகப் பின்பு தொடும் இடங்களைத் தொட்டதனுலே பயன் யாது?

விடை: கண்களைத் தொடின் சோம சூரியர்களுக்கும், நாசிகளைத் தொடின் அசுவனி தேவதைகளுக்கும், காதுகளைத் தொடின் அட்டதிக்கு தேவதைகளுக்கும், தோள்களைத் தொடின்

இந்திரனுக்கும், நாபியைத் தொடின் திருமாலுக்கும், இருதயத்தைத் தொடின் கலாமந்திரங்களுக்கும் விருப்பம் ஆகும். இங்ஙனம் தெய்வங்களுக்கும், மந்திரங்களுக்கும் விருப்பம் ஆதலால் தொடும் இடங்களைத் தொடல் வேண்டுவது.

5. வினு: சத்திய மான அத்திர சந்தி என்?

(இ-ள்.) உண்மையான அத்திர மந்திரத்தால் சந்தி செய்தலினுல் பயன் யாது?

விடை: சூரியனிடத்திலே இருக்கிற சிவபிரானுக்கு அத்திர மந்திரத்தினுலே அருக்கியம் கொடுத்தால் எல்லாப் பாவமும் கெடுவது. அம்மந்திரம் சகல பாவங்களையும் சேதிப்பதற்கு ஆயுதமாம். ஆதலால் அம் மந்திரத்துக்கு அத்திரம் என்பது பெயராயிற்று.

6. வினு: கூற்றை உதைத்தோன் நீற்றுச் சுத்தி என்?

(இ-ள்.) இயமனை உதைத்த சிவபிரானது விபூதியைச் சுத்தி செய்வது ஏன்?

விடை: கற்பம், அநுகற்பம், உபகற்பம் ஆகிய மூவகை விபூதியினுலே அமைக்கப்பட்ட திருநீறே சுத்தம் ஆம். அவ்வாறு மந்திரத்துடன் வைக்கப்பட்டது அல்லாத திருநீற்றைக் கலாமந்திர, சங்கிதா மந்திரங்களாலே சுத்திசெய்து மேற்கூறிய மூவகை விபூதி போலத் தரிக்கும் பொருட்டு நீற்றைச் சுத்தி செய்தல் சொல்லப்பட்டது.

7. வினு: வெட்டென நீற்றை இட்டால் பயன் என்?

(இ-ள்.) விரைந்து அத்திருநீற்றைத் திரிபுண்டரமாக அணிந்ததனுலே பயன் யாது?

விடை: பதினுறு தானங்களிலும் திருநீறு தரிக்கில் அட்ட வசுக்களுக்கும், அட்ட வித்தியேசுவரர்க்கும் விருப்பம் உண்டாகும்.

8. வினு: மாசில் குருவே! பின்பு ஆசமித்து என் பயன்?

(இ-ள்.) ஐயம் திரிபு அறியாமைக் குற்றம் நீங்கிய ஆச்சாரியனே! அதன் மேல் ஆசமனம் செய்வதால் பயன் யாது?

விடை: தீக்ஷையிலே பஞ்ச பூதங்களைச் சோதித்திருக்கவும் நாள்தோறும் அது திடம் பிறத்தற் பொருட்டுப் பூத சுத்தி பண்ணுமாறு போல முதற்கண் ஆசமனம் பண்ணினதால் தத்துவ சுத்தி உண்டாகவும், மீளவும் அவ்வாறு செய்வது அந்த சுத்தி திடம் ஆதற் பொருட்டு.

9. வினு: பிரணவத்தாலே பிராணுயாமம் என்?

(இ-ள்.) அகார, உகார, மகாரமாகிய மந்திரத்தாலே வாயுவைத் தடை செய்வதற்கு என்ன காரணம்?

விடை: ஒருவர் ஒரு கருமத்தைச் செய்து முடிப்பதற்கு மனம் ஒருமிக்க வேண்டும். ஆதலால் பிரணவத்தை ஆதியாக உடைய சங்கிதா மந்திரங்களால் பிராணவாயுவை உள்ளொடுக்குங்கால் ஒடுக்கி, வெளி விடுங்கால் விடுவது, அம்மனம் தன் வசப்பட்டு நிற்கும் பொருட்டு.

பிராணன் – பிராணவாயு; ஆயாமம் – அதனைப் போக்கு வரவு செய்து ஒடுக்குதல்.

10. வினு: விரண மறப் பண்ணில் வினைபயன் யாது?

(இ-ள்.) குற்றம் அற மேற் சொன்னபடி பிராணுயாமம் செய்ததனுல் உண்டாகும் பயன் யாது?

விடை: இம்மையிலே சகல சித்திகளும் மறுமையிலே மோக்ஷமும் கிடைப்பது பயனுகும்.

11. வினு: வலக்கையைக் காதில் வைப்பதால் பயன் என்?

(இ-ள்.) பிராணுயாமம் செய்து சிவத்தியானம் பண்ணி முடிந்த பிறகு வலக்கையைக் கொண்டு வலக்காதைத் தொடுதலால் பயன் யாது?

விடை: வலக் காதிலே அக்கினி முதலிய தெய்வங்கள் இருப்பதால் பூரக, கும்பக, இரேசமாகிய பிராணுயாமம் செய்த கரம் சுத்தியாவது பயனுகும்.

---

[தொடரும்]

# குன்றம்பூதனார் காணும் குமரவேள்

திரு. தமிழண்ணல் அவர்கள்
வேங்கடாசலபுரம்.

திருப்பரங்குன்றம், முருகவேளின் அறுபடை வீடுகளுள் ஒன்று. தமிழகத்தில் குன்றங்கள் பல உளவெனினும், குன்றம் என்னும் சொல் சிறப்பாகத் திருப்பரங்குன்றத்தையே உணர்த்தும். புலவர் பூதனார், திருப்பரங்குன்றத்தைச் சார்ந்தவராதல் வேண்டும். மதுரைக் கூலவாணிகன் சாத்தனார், புல்லாற்றூர் எயிற்றியனார் போலத் திருப்பரங்குன்றம் பூதனார் என்பதே குன்றம் பூதனாராக விளங்கியிருத்தல் வேண்டும்.

குன்றத்துறைந்த புலவர், குமரவேளைப் போற்றிப் புகழ்ந்து பரவியதில் வியப்பில்லை. முருகவேளைக் குறித்து இவர் யாத்த பாக்கள் இரண்டு. அவை பரிபாடலில் காணப்படுகின்றன. அவற்றுள் ஒரு பாடலின் திறத்தை இத்தலைப்பில் நோக்குவோம்.

## தோற்றம்

குன்றம் பூதனார் குமரவேள் தோன்றிய வரலாற்றைத் தெளிவுறச் சுருக்கி வரைகின்றார். அது;

முருகவேளின் தந்தை சலதாரி. கங்கையைத் தலையில் தரித்தமையால், சிவனார் சலதாரியானார். சிவபெருமான் உறையுமிடம் இமயமலை. அது வடதிசைக்கண் உள்ளது. அம்மலை, மேகங்கள் சூழ்ந்த சிகரங்களைத் தன்னகத்தே கொண்டு உயர்ந்தோங்கிய பெருமலையாகும். தீண்டி வருத்துகின்ற உயர்ந்த தெய்வங்களுக்குத் தலைவனான இந்திரன், இமயத்தைக் காக்கின்றான். தாமரையில் உறையும் பிரமன் கங்கையை நிலவுலகிற்கு இறக்க அக்கங்கையை நீலகண்டனான சிவன், தமது திருமுடியில் தரித்துக்கொண்டார். இத்தகைய சிவபெருமானுக்கு, கார்த்திகை மகளிர்தம் வயிற்றில், அவர்கள்தம் மணாளரான முனிவர்களின் இசைவோடு, இமயத்தின் உச்சியில் முருகன் தோன்றினான்.

பெருமை :

பூதனார், குமரவேளின் தோற்றப் பொலிவையும், தன்மையையும் தெளிவுறத் தீட்டியுள்ளார். அவை:

1. முருகன் மணங்கமழும் சந்தனப் புகையுண்ட பூமாலைகளை அணிந்தவன்.

2. வெண்ணிறமான முத்துமாலை ஒன்று, முருகனின் மார்பில் எஞ்ஞான்றும் தவழும்.

3. வெற்றி பொருந்திய வேலை, எப்போதும் தாங்கி விளங்குவான்.

4. அவன் கையகத்துள்ள வேல், மாமரமாக நின்ற சூரனை அடியொடு வீழ்த்திய ஆற்றல் மிக்கதாகும்.

5. பகைவரைப் போரில் வெல்வதில் வல்லவன் அவன்.

6. புகழ்மிக்க சேவல் கொடியினை உடையவன்.

கிழத்தியர் :

தேவசேனை, வள்ளி ஆகிய இருவருமன்றி வேறுசிலரும் முருகனின் அன்பிற்குரியாராவர் என்பதை,

"வையெயிற்று எய்யா மகளிர் திறம்இனிப்
பெய்ய உழக்கும் மழைக்கா;"

என்னும் பூதனாரின் அடிகளான் பெறலாம். உலக மக்களின் இயல்பை இறைவியரின் பாலும் ஏற்றி உரைக்கின்றார் புலவர். மானின் மகளான வள்ளியை முருகன் மணந்தஞான்று, வானவன் மகளான தேவசேனை, விண்ணகம் பொழியும் மழை போல கண்ணீர் வடித்தனளாம்.

காதல் முறையின் மணந்தமையான், முருகனுக்குக் காதற் கிழத்தி வள்ளியானவள். விண்ணவன் செல்வியை கற்பியல் முறையில் மணந்தமையான், முருகனின் கற்பியல் கிழத்தி தேவசேனையாவள்.

வள்ளியிடம் உறைந்து திரும்பிய முருகன்பால் தேவசேனை, "மாயனே, மழை நோக்கி வருந்தும் சோலைபோல, உன்னை

எண்ணி வருந்திய யானே தவறுடையள். இனி உன்னை விழை யேன்" என்று ஊடல் கொண்டு வெகுண்டு உரைத்தாள். தேவ சேனையின் ஊடலைத் தணிக்க முருகன், அவள் இருதாள்களிலும் பணிந்து வணங்கினன். பின்னர் தேவசேனை உள்ளம் உருகி, முருகனை ஏற்ருள். அதுபோது வள்ளி ஓடி வந்து, "தேவசேனை யைத் தோயாதே" என்று சினந்து கூறி, மாலைகளால் முருகனது இருகைகளையும் கட்டினுள்; தேவசேனையிடம் சென்றமைக்காக மாலையால் முருகனைப் பலமுறை அடித்தாள். இதுகண்ட தேவ சேனை மற்ருெரு மாலையால் வள்ளியை அடிக்கலானுள்.

இதற்கிடையில் வள்ளியின் மயில்கள் தேவசேனையின் மயில்களோடு பொருதன. வள்ளியின் கிளிகள், தேவசேனையின் கிளிகளை நோக்கி வசைமாரி பொழிந்தன. குன்றத்திலுள்ள வள்ளியின் வண்டுகள், தேவசேனையின் கூந்தலிலுள்ள வண்டு களோடு மோதின. வள்ளியின் தோழியர், தேவசேனையின் தோழியரோடு மாலைகளை எறிந்து சாடினர். கச்சினையே சாட்டை யாகக் கொண்டு, அவர்கள் ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டனர். ஒருவர்மேல் ஒருவர் கோபித்து அழகிய பந்து களையும், மாலைகளையும் வீசினர். வள்ளியின் தோழியர் சிலர் ஆண் யானைகளைப்போல போர் புரிந்தனர். வேறு சிலர் குதிரை களைப் போல ஒய்யாரமாக நடந்து சென்று போரிட்டனர். கடி வாளத்தை இயக்கும் சாரதிகளைப் போல நடித்துக்கொண்டு சிலர் பொருதனர். சிலர் வில்லை வளைத்தனர்; அம்புகளோடு அம்புகள் தாக்குமாறு அம்புகளை எய்தனர். தோள்வளைகளையே சக்கரமாகக் கொண்டு ஒருவருக்கொருவர் தாக்கினர்.

கடைசியாகப் போரில் வள்ளியின் தோழியர்களே வென்ற னர். தேவசேனையின் தோழியர்கள் தோற்றனர். தோற்ற சிலர் முருகனைச் சூழ்ந்து தழுவிக்கொண்டனர். சிலர் மாற்றுருவம் எய்தி வண்டுகளாக ஒலித்தனர்; மயில்களாக ஆடினர்; குயில் களாகக் கூவினர்; நீரில் மூழ்கி மறைந்தனர்.

சகக்கிழத்தியின் போராட்டமாக, வள்ளி, தேவசேனையின் போராட்டத்தை மேற்கூறியவாறு பூதனுர் புகன்று செல்கிருர். குன்றத்து வாழ்ந்த பூதனுர் ஆதலால், குன்றக்குறமகள்

வள்ளிக்கே வாகை சூடுகின்றார். போரில் வென்றவள் வள்ளியாதலால், முருகனுக்கு விருப்பமானவளும் வள்ளியே என்கிறார்.

### குன்றம்

குமரவேள் உறையும் திருப்பரங்குன்றத்தில் சுனைகளும் சோலைகளும் நிறைந்துள்ளன. ஒரு பெரிய சுனையின் அருகே கொடி ஒன்று நாட்டப் பெற்றுள்ளது. அக்கொடியின்கீழ், யார்யார் எத்துறைகளில் வல்லவர்கள் என்பதை உறுதிப் படுத்துதற்கான போட்டிகள் நிகழ்கின்றன. அங்கு ஆடலில் வல்லவர், ஆடற்கலையில் சிறந்த கூத்தரோடு ஆடி வெற்றி காண்கின்றனர். இசையில் வல்லோர், இசைக்கலையில் வல்லாரோடு இசைபாடி இசைகொள்கின்றனர். சூதாடுதலில் வல்லவர், அத்துறையில் வல்லாரோடு ஆடி வெற்றியுறுகின்றனர். இது போன்ற காட்சிகளைக் குன்றம்பூதனர் தமது செய்யுளில் அடுக்கிச் செல்கின்றார்.

இக்காலத்தில் நடைபெறும் ஒலிம்பிக் போட்டி போல கொடிகட்டி, அதன்கீழ் பல்வேறு போட்டிகள் பண்டு நம் நாட்டில் திருப்பரங்குன்றம் போன்ற மக்கள் மிகுதியாகக் கூடும் இடங்களில் நிகழ்ந்துள்ளன. இது அறிந்து போற்றத் தக்க செய்தியாகும்.

திருப்பரங்குன்றத்தில் முருகன்பால் கொண்ட பேரன்பின் விளைவே, வள்ளி, தேவசேனையின் போராட்டமாகும். இதனுல் முருகனின் கவர்ச்சிமிகு தோற்றமும், பேரழகும், புலவரால் கூறுமல் உணர்த்தப்படுகிறது.

### வேண்டுகோள்

புலவர் குன்றம் பூதனர், "நின்னிடத்திலே பேரன்புடைய யாம் நின் திருவடிக்கண் நாளும் வாழும் நல்வாழ்வை என்றும் எமக்கு அளித்தருள்வாயாக" என்று உள்ளம் குழைந்து, முருகனிடத்து வேண்டுகோள் விடுக்கின்றார். ஆயிரமாயிரம் மக்கள், தம் உள்ளங்களில் வேண்டும் வேண்டுகோளையே புலவரும் வேண்டுகின்றார். இத்தகைய பூதனரின் புகழ், பூதலமெங்கும் பரவுவதாக!

---



# இசைக்கலை

தேவார இசைமணி,
திரு. S. சங்கரநாராயணன் அவர்கள்,
ஸ்ரீ கண்டேசுவர சுவாமி தேவஸ்தானம்
நாமரங்கோட்டை P. O. பட்டுக்கோட்டை தாலுகா,

---

அழகுக் கடவுள் தனி இயற்கையில் எவ்வண்ணம் பொலிந்து உருவங்கள் வாயிலாகத் தன்னை உணர்த்துகிறதோ, அவ்வண்ணமே இயற்கைச் சார்புபெற்ற கலைகளிலும் பிறவற்றிலும் பொலிந்து தன்னை உணர்த்தும். இயற்கைச் சார்புபெற்று, அதன் தத்துவங்களையும் தம்மகத்தே தாங்கி நிற்கும் கலைகளெல்லாம் இயற்கையின் பாற்பட்டனவே. அவை செயற்கை யல்ல. கலைகள் இயற்கைக் குழவிகள். அவைகளிடம் இயற்கைக் கூறுகள் இல்லாமற் போகுமோ?

இயற்கைச் சார்புகொண்ட கலைகள் பல வகை. அவைகளில் இங்கே இசையைப் பற்றிச் சிந்திப்போம். இசைக்கு மூலம் நாதம். நாதம் ஒரு தத்துவம். அதற்குமேற்பட்ட தத்துவம் இல்லை. அதற்குமேல் ஒளிர்வது பரம்பொருள் ஒன்றே. பரம்பொருளுக்கு மிக அணித்தாக நாதம் இருத்தலால், அது 'நாத பிர்மம்' என்றும், 'சப்த பிர்மம்' என்றும் அழைக்கப்படுகிறது. 'ஏழிசையாய் இசைப் பயனாய்' என்றார் வன்றொண்டர்.

நாத ஒலி கேளாதது. அதைக் கேட்பதாக்க, மனம் கரணம் புலன் பொறி முதலியன அமைந்துள்ளன; நாதம் தனித்தும் இருப்பது; மற்ற தத்துவங்களுடன் கலந்தும் இருப்பது. தனி நாதத்தினின்றும் எழும் இசையே தூயது; முழுமையது. மற்றத் தத்துவங்களுடன் கலந்துள்ள நாதத்தினின்றும் எழுவது தூய இசையாகாது; முழுமையதுமாகாது. கலப்புநாதம் அவ்வத்தத்துவ இயல்புக் கேற்றவாறு இசையை எழுப்பும். அதனால்

அது தூயதாகவும் முழுமையதாகவும் எழுவதில்லை. தனித்த நாதம் வரை சென்று திரும்பும் பயிற்சி பெறும் ஒருவனே சிறந்த இசைப்புலவனாவன். யோகத்தின் முடிந்த எல்லை தனி நாதம் என்று யோகநூல்கள் கூறுகின்றன. தனிநாதம் வரை செல்லாது சிற்சில தத்துவம் வரை சென்று ஆங்காங்குள்ள கலப்புநாத உறவு கொண்டு திரும்புவோன் நல்லிசைப் புலவனாகான். தனிநாத இசை, கலப்பு நாதஇசை என்னும் இரண்டில் முன்னையது தன்னை முழக்கும் ஆற்றல் வாய்ந்த ஒருவனையும் பரம்பொருளுடன் ஒன்றச் செய்யும்; பிறரையும் பிறவற்றையும் அதனுடன் ஒன்றச் செய்யும்.

இயற்கையிலே அருவி, கடல், மூங்கில், சங்கு, வண்டு, குயில், வானம்பாடி முதலியன இசை முழக்குகின்றன. அவ்விசையில் ஈடுபட்ட மனிதன், அதன் வயமாகியதும், அவனது மனம் புறத்தே ஒடுங்கி, நடுவில் நின்று, அடியிற் பாய்ந்து மறைந்து, நாதத்தின் கூட்டுறவை அவனுக்கு நல்குகிறது. நாதமூலங்கண்ட மனிதன் இசையின் இயலை உணர்ந்து, இயற்கை வழியே சுரம் முதலிய இசைக்கூறுகளைப் படிப்படியே வகுத்தான். இயற்கை இசை, மனிதன்குரல்-குழல்-யாழ்-வீணை முதலிய கருவிகள் வாயிலாக வெளியாகி இன்பமூட்டுகிறது.

சுரத்தில் அவம் பேசப்படுகிறது. அஃதென்னை? அவசுரம் இசையில் போதிய பயிற்சி இல்லாதவனிடம் உண்டாவது. இயற்கையில் அவசுரம் இல்லை. நாதமூலங்கண்ட இசைவாணனுக்குக் காகசுரமும் கழுதைசுரமும் நாதசுரமாகவே இனிக்கும். நாதமூலங் காணாதார் கூற்று ஏற்கத்தக்கதன்று.

கடவுள் அழகு. அதற்கு அணித்தாக உள்ளது நாதம். நாதம் அழகின் சேர்க்கையால் அழகுவண்ணமாகி மற்றத் தத்துவக் காரியங்களாய இயற்கைக் கூறுகட்கெல்லாம் அழகை உதவி வருகிறது. நாதம் அழகுவண்ணம்; இசைமயம். நாத இசையும் அழகாகுமன்றோ? இசைவாணர் எத்தகையராயினும் அவர் முகத்தில் அழகு ஒளி செய்தல் காண்கிறோம். இசைமனம் அழகு பெற்று முகத்துக்கும் விருந்து செய்கிறது, இசையை யொட்டியது நாட்டியம். நாட்டியம் ஒவ்வொரு நரம்பையும் பயிற்சியால் பண்படுத்தலால், நரம்புகள் நன்னிலை

எய்திக் குருதி யோட்டத்தை ஒழுங்குபடுத்தி அழகைப் பொலி விக்கும். இசையும் அழகும் தொடர்புடையன. இத்தொடர்பு இசையைத் தெய்விகமாக்குகிறது. இசையின் தெய்விகம் செயற்கரிய செய்யும்.

பாணன் காட்டின் வழியே செல்கிருன். மதயானை வெறி கொண்டு ஓடிவருகிறது. பாணன் யாழை முழக்கினுன். யாழிசை யானையை வயப்படுத்தியது. மதயானை இசை கேட்கிறது. அதன் மனம் மாறியது. இசைக்குப் பாம்பும் படம் விரித்து ஆனந்தக் கூத்தாடும். சங்கரனுக்கு ஆபரணம் எது? பாம்பு - பாம்பு சங்கரனுக்கு அணித்தாகவுள்ள நாத இசைகேட்டு (இசை) ஆபரணமாகியது. இதனுல் இராகங்களுள் ஒன்று சங்கராபரணம் என்ற பெயர் பெற்றது போலும்!

இசைக்குக் கனியாத கல்லுமிராது; மரமுமிராது. இசைக் குக் கனியாத மனிதன் இருப்பனேல் அவனை என்னென்று கூறுவது? அவன் கல்லினும் வலியன்; மரத்தினும் வைரன்; கொலைஞன்; பாவி; அரக்கன். இசையைப் பற்றிய தெய்விகக் கதைகள் பல உண்டு. அவை யாவும் இசையின் மாண்பை மக்கள் உணர்ந்து நடப்பதற்கென்று புனையப் பெற்றன.

'இசை பாடற்குரியது; வழிபடற் குரியதோ' என்று சிலர் நினைக்கலாம். இசையைப் பாடுவதும் வழிபாடாகும், வழிபா டென்பது மலர் எடுத்து மாலை கட்டி இறைவனுக்குச் சூட்டிக் கோயிலை வலம் வந்து கையால் கும்பிடுவது மட்டுமன்று. மனத்தால் அழகுக் கடவுளை நினைப்பதும், அதனுடன் ஒன்று வதும், வாயால் அதன் புகழை இசையாகப் பாடுவதும், இன்ன பிறவும் வழிபாடுகளேயாகும்.

இசை வழிபாடு செய்து பேறு பெற்றவர் கதைகள் பல வுண்டு, அறுபான் மும்மை நாயன்மாருள் இசை முழக்கிப்பேறு பெற்றவரும் இருக்கின்றனர். ஆனுயர், திருநீலகண்ட யாழ்ப் பாணர், திருஞானசம்பந்தர், முதலியோர் இசை வழிபாடு செய்த வர். இசை வழிபாட்டுச் சிறப்பைப் பாகவதம், பெரிய புராணம் முதலிய அருள் நூல்களில் தெளிவாகக் காணலாம்.

———

உ

சிவமயம்

பாலருவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(மூன்றும் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்
இயற்றியது.

---

[மலர் 13. இதழ் 2-ன் தொடர்ச்சி]

அந்த வன்னம் பாலிப்புக் கையா யிரமாச் சாள்புரத்தில் அதற்கை யாயி ரங்குடந்தை ஆதி குமர குருபரனுர், சொந்த நினைவின் மாசிமகச் சோறு வழங்கப் பதினெட்டாச் சொல்லு மாயி ரத்துடனே தொடரு மெழுநூ றுயர்காசி, முந்து பதியி லவர்நினைவு முன்னி நாளுஞ் சோறளிக்க முற்று முவை யாயிரமாம் முனிவர் நினைவி லையாற்றில், நந்து மன்னம் பாலிப்பு நடத்த வாரு யிரங்காசி நல்ல வமைச்சர் குலச்சிறையார் நண்பார் சிம்ம மதியினிலே 14

அன்னம் பாலிப் புச்செய்ய வாரு யிரஞ்சீர்த் தணிகைவரை அதனிற் குமர குருபரர்நா ளன்னம் பாலிப் புக்காக, மன்னு மேழா யிரம்பழநி வண்மைப் பதியி லதுநிகழ வளமார் பதினு யிரமவர் பேர் மருவு நினைவி னிர்ப்பந்தர், முன்னர் வைத்தீஸ் வரன்கோயின் முதிய பதியி னிகழுதற்கு மொழியு நாலாயி ரந்தில்லை முனிவர்க் கெல்லா மிதுனமதி, தன்னிற் றிருமஞ் சனவிழாவிற் றக்க விசேடச் சோறளிக்கச் சார்ந்த பத்தா யிரமருணைத் தண்ணீர்ப் பந்தர்த் தனிநிதியே 15

மூவா யிரத்தைந் நூறுபுகார் முதன்மைத் தலத்திற் கடக மதி முன்னு மமாவா சைநாளில் மொழியு மன்னம் பாலிப்புக், கோவா வையா யிரமருணை யுயர்ந்த பதியி லானிரையை உற்ற சம்வர்த் தனநிதியாய் உதவி யாறைந் தாயிரமாம், தேவர் காசிக் குருபரனுர் திருத்தே வாரந் திருமுறைக்குஞ் சீரா ரன்னம் பாலிப்புச் செய்வ தற்கு நாலிலக்கம், பூவார் தாயு மானவிறை பொலியுஞ் சீர்த்திச் சிராப்பள்ளிப் புனிதப் பதியிற் குமரகுரு பொற்பார் நினைவு புகுத்திடவே 16

திருத்தே வார நிதியாகத் திகழும் பதினெட் டாயிரத்தைச் சேர்ந்த வைந்நூ ருகுமந்தச் செல்வர் நினைவு நாளினிலே, ஒருத்தர் திருக்கா ளத்தியினி லுணவு வழங்க வுதவுநிதி ஓரே மாயி ரந்தேவை யுண்மைப் பதியிற் றேவாரம், நிருத்தர் மகிழ நிகழுதற்கு நிதியைம் பானு யிரத்தொன்ருய் நின்ற வாயி ரஞ் செந்தூர் நிமலர் கந்தர் கலிவெண்பாத், திருத்தப் பாரா யணத் திற்குச் செல்வ நிதிமு வாயிரநந் திருக்கே தார யாத்திரைக்குச் சிறந்த நிதியோ ரிலக்கமே 17

அடியு முடியுங் காண்பமென வயனு மாலு முயல்வுறமற் றவர்கள் காணு வடிமுடிய ராகி யழலா யரனிருந்த, படியா லருண கிரியென்னப் பகருந் தலத்திற் படிக்காசுப் பண்பார் நிதியா யுதவியது பதின்மூன் ருயி ரம்மாகும், கடியார் சோலைக் கழுக்குன்றக் கவினுர் தலத்திற் குமரகுரு காத னினைவு நாளன் னம் கருதி வழங்க வெழுபதுநா, றடியார் காசித் திருத்தலத்தி லன்போ டுறையுந் தருமநிதி அமரக் குமர குருபரர்பே ரமைய நூறு யிரமன்றே 18

திருத்தா டகைத்தாய் பணியேற்றுச் செய்ய சடையெம் பெருமானுர் திகழும் பனசைத் திருத்தலத்திற் சீமான் சாமி நாத முனி, உருத்தங் கியசெந் தமிழ்பயிற்று முயர்செந் தமிழ்க்கல் லூரியினி லுறுமா ணவர்க ளுடல்வளத்துக் குணவு நிதியா யுதவியது, பெருத்த விருப தோடிரண்டாப் பேசு மாயி ரம்மா கும் பெருமான் மகிழு மாயூரப் பேரார் பதியிற் குமரகுரு, திருத்த நினைவு நாளிலன்னம் சீராய் வழங்க வுதவுநிதி சிறப் பாம் பதினு யிரமிதற்குச் சேமப் பழநித் திருத்தலத்தே 19

---

(வளரும்)

# வாசகத் தேன்

திரு. க. சுப்பிரமணியன் அவர்கள்,
ஆத்தூர்.



'திரு' என்னும் தெய்வீக அடைமொழி தாங்கிய நூல்கள் தமிழில் எண்ணில. 'திரு' என்ருல் அழகு, தெய்வத் தன்மை என்று பொருள். பேரழகும், தேனினிமையும், திருவருள் நாட்டமு முடைய வாசகத்தைத் திருவாசகம் என்று அழைப்பது மிகவும் பொருத்தமுடையது.

சிவனது அநாதித்தன்மை, அடியவர் பால் அருள்புரிந்து ஆட்கொண்ட அருட்திறன், சைவப்பேருண்மைகள் முதலிய வற்றை எளிதாக இனிமையுடன் விளக்கி சைவசமயிகட்கு ஏன்? உலகமக்கள் அனைவருக்குமே உய்வு பெற உதவும் உயர்ந்த வழிகாட்டியாய்த் திகழ்வது சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் எட்டாம் திருமுறையாக விளங்கும் திருவாசகம் என்பது நூலோர் கண்ட முடிபு.

வாசகத் தேனை வண்டாக இருந்து பருகியவர் வள்ளலார். திருவாசகத்தைப் படிக்கும் பொழுது நாம் நூலுடன் ஈடுபட்டு ஒன்றறக் கலந்து விடவேண்டும். 'கலந்து பாடுதல்' என்னும் தன்மை உண்டாயின் வள்ளலார் கண்ட இன்பத்தை வாசகத் தில் காணலாம்.

நாடகம் பார்ப்பவர்கள் தங்களை மறந்து அதில் வரும் காட்சிகளில் ஈடுபடுகின்றனர். நாடகத்தை மேடை என்றும், திரைச்சீலைகள் என்றும், பொய்க் கதை என்றும் பாவனைசெய்து பார்த்தால் நாடகம் சுவைக்காது. எனவே வாசகத்தின் சுவை உணர தன்னை மறந்து கலந்து பாடுதல் என்னும் நிலை எய்தல் வேண்டும்.

'வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே'

என்பது வள்ளலார் வாக்கு.

தேன் மிகவும் இனிமை பொருந்தியது. திருவாசகம் கண்டாரால் விரும்பப்படும் அழகுத் தன்மையாகிய இனிமை பொருந்தியது. மலச்சிக்கல் முதலிய நோயுடையவர்கள் தேனைப் பருகினுல் விரைவில் குணமடைகிறுர்கள். எனவே தேன் மலம் முதலிய நோயறுப்பது. திருவாசகமோவெனில் படிப்பவர்களின் ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களையும் அறுக்கிறது.

"தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே."

என்பது சிறப்புப்பாயிரம்.

தேன் கெடாது நீண்டநாள் இருக்கும். பழங்களைக் கெடாமல் பாதுகாக்கும் பொருட்டு தேனில் போட்டு வைப்பது வழக்கம். தேன் தானும் கெடாது, தன்னில் போடப்பட்ட பொருட்களையும் கெடவிடாதபடி பாதுகாக்கிறது. எக்காலத்துக்கும் பயன்படக்கூடியதாய், படிப்பவர்களின் உள்ளத்தைத் தூய்மைப் படுத்தி நன்னெறிக்கண் புகுத்தும் தன்மையுடையது திருவாசகம். திருவாசகம் தானும் கெடாது தன்னைப் படிப்பவர்களையும் கெடவிடாதபடி பாதுகாக்கின்றமையால் தேன் எனப்பட்டது.

'திருவாசகம் என்னுந் தேன்' என்பது பாயிரம்.

பைபிளைக் கொடுக்க வந்த பாதிரியார் திருவாசகத்தை அல்லவா கொண்டு சென்ருர்! தம்மவரைமட்டுமின்றி தம் மத உண்மைகளைப் பரப்ப வந்த மேனுட்டவரையும் கூடக் கவர்ந்த சொல்வன்மை பொருந்திய நூல் திருவாசகம்.

"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல்"

எனும் வள்ளுவப் பெருந்தகையின் வாக்கை வாசகத்தில் காணு கிறோம்.

வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி உள்ளம் உருகி நிற்பவரை யாம் காணவில்லை. வாசகத்தை ஒரு தடவை ஓதினால் ஓதுவார் கேட்பார் ஆகிய எல்லோருடைய உள்ளங்களும் உணர்ச்சி வயப் படுகின்றன. கண்கள் நீரைத் தாரை தாரையாகச் சொரிகின்றன. திருவாசகம் ஓதுங்கால் ஏற்படும் உடலுணர்ச்சிகள் வேதம் ஓதுங்கால் நிகழ்வதில்லை. எனவே வாசகம் வேதத்தினும் சிறந் தது என்பார் சிவப்பிரகாசர்.

"வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேந்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி"

என்பது சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கு.

போலிப் பக்தர்களை நாடகத்தில் நடிக்கும் கூத்தாடிகட்கு ஒப்பாகக் கூறிக் கடிந்துரைக்கும் மணிவாசகப் பெருமானின் கருத்து நயம் படித்து மகிழ்தற்குரியது. அரசவேடம் பூண்டு நடிக்கிறவன் மேடையில் இருக்கும்வரைதான் அரசனாகத் திகழ்கிறான். அவன் உண்மையில் அரசனல்ல. அரசவேட தாரியே யாவான். வேடம் களைந்த பின்னர்ப் பழைய தன்நிலை அடைகிறான். இறைவன் முன்னிலையிலும், அவனது அடியார்கள் மத்தியிலும் இருக்கும் சமயம் பெரிய பக்தனாக நடித்தலும் வெளி உலக வாழ்க்கையில் வந்தவுடன் இறைவனை மறந்தும், அவனதடியார்களை இழித்தும் பழித்தும் கூறுதலாகிய இழி செயல்களை மேற்கொண்டு நடக்கின்ற போலிப் பக்தர்கள் நாடக மாடிகட்கு ஒப்பாவர் என்பார் மணிவாசகப் பெருமான்.

'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து' என்பது அவர் மணிவாக்கு.

பாற்கடலில் கிடைத்த அமுதமாய்க் கொண்டு திருவாசகத்தை ஓதிவருதல் மனித உயிர் உய்வுபெற வழியாகும். திருவாசகத்திற்குப் பொருள் தில்லையில் கூத்தியற்றும் பெருமானேயெனப் பகர்ந்து சோதியில் கலந்தார் மாணிக்கவாசகர். ஆமாத்திய அந்தணர் குலத்தில் உதித்தவர் மணிவாசகப் பெருமான். தாழ்ந்த குலத்தில் தோன்றிய நந்தனுர் சோதியில் கலந்த இடமும் தில்லையே. அம்பலவாணர் சந்நிதியில் நிறுவப்பட்டிருக்கும் பக்தி எனும் நிலைக்கோலில் உயர்வு தாழ்வு இரண்டும் சமமாக நிறுத்தப்படுவதைக் காணலாம்.

இறைவனை அம்மையே அப்பா எனத்தானும் பாடி, நம்மையும் பாடவைத்து, நமக்குப் பின்வரும் சந்ததியினரையும் பாடவைத்து உலகில் சகோதர தத்துவத்தை நிலைநாட்டியவர் மாணிக்கவாசகர்-அவர் பாடியது திருவாசகம் எனும் செந்தமிழ் மறை!

---

திருமுறை நண்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு

## திருஞான சம்பந்தர் தேவாரம்

[புதிய பதிப்பு]

பிலவ வருஷ வைகாசி முல வெளியீடு

832 பக்கங்கள் கொண்டது, உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப்பெற்றது.

★ பிரதி ரூ. 2-75 ★

(தபால் கட்டணம் வேறு)

ஒரே சமயத்தில் 20 பிரதிகளுக்குமேல் வாங்குவோருக்கு 20% கமிஷன்.

கிடைக்குமிடங்கள் :-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில்,
ஸ்ரீவைகுண்டம் — (திருநெல்வேலி ஜில்லா)

2. "தியாகராஜ விலாசம்"
53, பிள்ளையார் கோயில் தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

# கடுங்கோவின் சொல்வண்ணம்

திரு. கோ. பாலசுப்பிரமணியன் அவர்கள்
ஆசிரியர்,
கல்லிடைக்குறிச்சி

---

மேற்கணக்கு நூலாகிய எட்டுத்தொகையுள் கற்றறிந்தோர் ஏத்தும் கவினுடையது "கலித் தொகை" என்பதை அறியாதார் யாரே! அந்நூலுள் முதன் முதலில் அமைந்துள்ளது பாலைக்கலி. குறிஞ்சியும் முல்லையும் திரிந்த நிலமே பாலையாகலான் ஒல்காப்புகழ் தொல்காப்பியனுர் அதற்கு நிலவரையறை செய்திற்றிலர்.

"நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே. (தொல், பொருள்–2)

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் நிலங்கள் போன்று, பாலை காண்போர் மனத்தைக் கவர்வதில்லை. ஆண்டு கரிந்த கா்ரையும், பொரிந்த சூரையும், உரிந்த வேலுமே காட்சிதரும். கண்ணுக்கெட்டிய தூரம்வரை ஒரேமணல்வெளி. வெய்யோனின் முழு ஆட்சிக்குட் பட்டமையை அவ்வழியே செல்வார்க்கு அறிவுறுத்தி நிற்கும் பிளவுபட்ட நிலம். பறவைகளும் பறப்பதற்கு அஞ்சும் வெம்மைமிக்க நிலம். வம்பலரைக் கொள்ளையடிப்பதையே தொழிலாகக்கொண்ட கூற்றினுங் கொடிய ஆறலை கள்வர் வாழிடம். அவர்தம் கொடுமையே,

"............................ கடுங்கண் மறவர்
கொள்ளும் பொருளிலர் ஆயினும், வம்பர்
துள்ளுநர்க் காண்மார், தொடர்ந்து உயிர்வௌவலின்"
(கலித்தொகை–3)

"............................ வெஞ்சுரத்து
உலந்த வம்பலர் உவல்இடு பதுக்கை

நெடுநல் யானைக்கு இடுநிழல் ஆகும்
அரிய கானம்......................." (குறுந். 77)

என்னும் பகுதிகள் சங்கையின்றி விளக்கும். இத்துணைக் கொடுமை நிறைந்த பாலை நிலத்தைப் பற்றி பிறர் உளங்கொளப் பாட வேண்டுமாயின், கருத்தை விட்டகலாத காட்சியொன்றை உள்ளத்திரையிலே எழுத வேண்டுமாயின், கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிய வேண்டுமாயின் அதற்குத் தனித்திறமையும், கேட்போர் உளங்களைப் பற்றி ஈர்க்கும் கவித்திறனும் வேண்டற்பாற்றன்றோ! இத்துணை அனுபவங்களையும் பாலைக்கவி பயில்வார் தெள்ளிதின் உணரலாம். பாலைத்திணையைப் பாடுதற்கென்றே பிறந்தவர் "பெருங்கடுங்கோ" என்றால் அது எவ்வாற்றானும் மிகையன்று. அவர் பாடல்களுள் ஒன்றினை ஈண்டுக் காண்போம்.

முன்னோர் ஈட்டிய பொருளைக் கொண்டு வாழ்க்கை நடாத்துதலை அக்கால மக்கள் இழிவெனக்கருதினர். தன்னேரில்லாத் தலைவனேயெனினும் பொருள் தேடச் செல்லுதல் இயல்பு. இக்கருத்தை களவியல் 35-ம் சூத்திர உரையும் கீழ்க் கண்ட குறுந்தொகை அடிகளும் அரண்செய்கின்றன.

உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இழிவு (குறுந். 283.)

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு, தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தானென்னும் ஐவரையும் ஓம்புதற்கு, இரப்போர்க்கு ஈந்து இசைபட வாழ்வதற்குப் பொருள் முக்கியத் தேவையாம். என்னை? பொருள் இல்லாதவழி இவற்றைச் செய்ய வியலாதாகலான். ஈயென ஒருவன் இரந்தவழி இல்லை என்றலைப் போன்ற இழிவு வேறெதுவும் இல்லை.

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று." (புறம். 204)

இரவுள்ள உள்ளம் உருகுங் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். (குறள். 1069)

மேற்கண்ட இயலுடையான் தலைவன். பொருளீட்டச் செல்வதில் நாட்டமுடையவனாய்க் காணப்படுகின்றான். தலைவிக்கு உரைத்துச் செல்வதா வேண்டாவா என அல்லலுறுகிறான். எவ்வாற்றானும் பொருள்தேடச் சென்றேயாக வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நிற்கின்றது. அகம் நோக்கி உற்றதுணரவல்ல தலைவி, தலைவனின் முகம் நோக்கி அவன்றன் உள்ளக்கிடக்கையை அறிந்து கொள்கிறாள். அவனைத் தடுத்து நிறுத்துதலும் ஒல்லாது. தன்னால் அன்பு செய்யப்பட்டவனது துன்பமும் பொருள். ஆகலான் தன்னையும் உடன்கொண்டு பெயர்க என்று தலைவனிடம் கூற வேண்டும் என உன்னுகிறாள். அவ்வாறு சொல்லின் "யான் செல்லும் காட்டுவழி மிகவும் கொடுமையுடையது; எனவே வாரற்க," என்று தலைவன் தன் எண்ணத்தை மறுத்தாலும் மறுக்கலாம். அவ்வாறு கூறினும் யான் நிற்பேன் அல்லேன் என்கிறாள் தலைவி. தடையும் விடைமாக வருகிறது பாடல். காட்டுவழியின் தன்மையை அறிய வேண்டாவா!

வானம் வழங்காத் தகைமையினால், விசும்பின் துளி வீழாததால் ஆங்குப் பசும்புல் காணக்கூட இல்லை. காட்டுப் பசுக்கள் உண்ணத் தகுதியான பொருள்கள் ஒன்றும் கிடைக்கப் பெறாமல் மரல்களைத் தின்கின்றன. எத்துணை கொடுமை! அம்மட்டோ! பொருள் நசைஇ அவ்வழிச் செல்லல் மேற்கொண்டாரை வருத்தும் வெய்யோன் கொடுமை ஒருபுறம். மற்றோர்புறம் ஆறலை கள்வரின் அல்லல். வழிச் செல்வார்மீது கள்வர் எறிந்த சுரையோடு கூடிய அம்பு உடலிலே பாய்கின்றது. உடல் தளர்கின்றது. நாவறட்சியடைகின்றது. வறண்ட நாவிற்கு நீர் கிடையாமையின் துன்பம் மிக்கூற அவர் வடித்த கண்ணீரே நாவின் வறட்சியைப் போக்குகின்றது. இத்தகைய கொடுமை நிறைந்தது பாலை என்கிறார். கவியின் சொல்லோவியத்தைக் காணவேண்டாமா? இதோ அவ்வடிகள்.

"மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங்கு அருஞ்சுரத்து ஆரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்

உண்ணீர் வறப்பப் புலர்வாடும் நாவிற்குத்
தண்ணீர் பெறுஅத் தடுமாற்று அருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடென்றால்".

(மரைஆ-காட்டுப்பசு; சுரை-அம்பின்முகப்பு; புரையோர்-ஆறலைகள்வர்)

இவ்வடிகளை எண்ணுந்தொறும் கவிஇன்பம் பெருகுவதைக் காண்கிறோம். "புலர்வாடும் நாவிற்குத் தண்ணீர் பெறுஅத் தடுமாற்று அருந்துயரம் கண்ணீர் நனைக்கும் கடுமையகாடு" என்னும் அடிகள் படிப்போர் நினைவில் நீங்காது சுழலுமன்றோ! அக்காட்சி கண்முன் நிகழ்வது போல் தோற்றுகின்றது. நாம் பாலை நிலத்தில் நிற்பது போன்ற உணர்வினை அடைகிறோம். என்னே கவியின் மாண்பு! இவ்வடிகளில் கருப்பொருள் சிறந்து நிற்கக் காண்கிறோம். பின்னடிகளில் உரிப்பொருள் சிறந்து நிற்கின்றது.

இத்துணைக் கொடுமை நிறைந்தது காட்டுவழி என்று கூறித் தன்னை ஏமாற்ற முடியாததென்கிறாள் தலைவி. காட்டு வழியின் தன்மையைக் கூறி என்னை உடன்வாரற்க என்று கூறினால் என்னியல்பை நீங்கள் அறியாதவர்போலாம். அவ்வாறு சொல்வது உங்கள் பெருந்தன்மைக்குத் தக்கதும் அன்று. அன்றியும் நம்மிருவர்பாலுள்ள அன்பு அழிந்து போக எண்ணுது தாங்கள் செல்லும் காட்டுவழியே என்னையும்உடனழைத்துச் செல்லுங்கள். தாங்கள் துன்பமுற்றுழி உதவும் துணையாகவாவது அல்லது தங்கள் துன்பத்தில் பங்குகொள்ளும் துணையாகவாவது அழைத்துச் சென்றால் அதுவே எனக்குப் பேரின்பம். ஆகலான் "என்னையும் உடன்கொண்டு செல்லுங்கள்" என்கிறாள் தலைவி. இக்கருத்தமைந்துள்ள எஞ்சிய பாடல் பகுதியைக் காணவேண்டாவா!

என்னீர் அறியாதீர் போல இவைகூறின்
நின்நீர அல்ல நெடுந்தகாய்! எம்மையும்
அன்புஅறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பந் துணையாக நாடின் அதுவல்லது
இன்பமும் உண்டோ எமக்கு.

என்னே மங்கையின் மாண்பு! தமிழ்ப் பெண்ணின் உளப்பாங்கினை அங்கை நெல்லிக்கனியென விளக்க முறச்செய்

கின்றனவன்ரோ, இவ்வடிகள்! தற்காத்துத் தற்கொண்டான் பேணும் இவள் நலமும், நோவின் நோதலும், பிரிவு நனியிரங்கலும் கற்ருேர் போற்றும் திறத்தனவன்ரோ! கொண்கன் துன்பத்தில் பங்குகொள்வதைக் காட்டிலும் மேலான பேரின்பம் எனக்கில்லை எனக்கூறும் மெல்லியலாளின் கற்பின் திறத்தை உன்னுங்கள். இன்னுமை இன்பம் எனக்கருதும் தலைவியின் தன்மை வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்தன்றே! தற்காலப் பெண்டிர்க்கு நல்லறிவு கொளுத்தும் மங்கையாகக் காட்சிதருகிருள் பாலைபாடிய பெருங்கடுங்கோவின் பாவிலே உதித்தவள்.

முற்றும்

---

# எங்கள் குமரன்

[காவடிச் சிந்து]

வண்ண மயில் மீதமர்ந்த வேலன்—அவன்
வாழ்த்து மடியார்க்கனு கூலன்—எங்கள்
கண் கவரும் மாபழனி மீதமர்ந்து அன்புடனே
காப்பான் வளம் சேர்ப்பான். 1

நெஞ்சுருகி நின்று தமிழ்பாட—நம்
நீள்வினைகள் யாவும் பறந்தோட—கந்தன்
அஞ்சலென மஞ்ஞையுடன் கொஞ்சுமொழி வள்ளியுடன்
வருவான் அருள் தருவான். 2

ஆறுதலைகள் தனை உடையான்—அவன்
அமைந்த ஆறு விட்டுப்படையான்—நல்ல
தேறுதல் தனையளித்து தேசுமிகு வாழ்வளிக்கும்
பெரியோன் மலைக் குரியோன். 3

குன்றம் பிளந்த தெங்கள் குமரன்—அவன்
கோழிக் கொடியுடைய அமரன்—வந்து
என்று மிங்கு நின்று துணை தந்தருள வேண்டுமென
நினைவோம் மாலை புனைவோம். 4

கவிஞர். சு. மு. சொக்கலிங்கன்.
பழனி.




மதுரகவி மரபினர்,
திரு. T. N. N. கவிக்குஞ்சரப் பாவலர் அவர்கள்,
மெயின்ரோடு, வாளாடி P. O. திருச்சிராப்பள்ளி.

[மலர் 13, இதழ் 2-ன் தொடர்ச்சி]

இச்சூத்திரத்து "மூவகையாய்ச் செய்து" என்பதற்குப் பாட்டுடைத் தலைவன் பெயர்நாள் அல்லது பிறந்த நாள் தொடங்கி இருபத்தேழு நாட்களையும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்யவேண்டுமென்று கூறியது என்னை யெனின், காட்டுதும்.

இச்சூத்திரத்தின் கண்உள்ள அட்டம இராசி என்பதைப் பாட்டுடைத்தலைவன் பிறந்தநாள் அல்லது அவன் பெயர் நாளுக் குரிய இராசிக்கு எட்டாம் இராசிக்கண் நின்ற நாட்கள் என்றும், வைநாசிகம் என்பதைப் பாட்டுடைத்தலைவன் நாளுக்கு இருபத்திரண்டாம் நாள் என்றும், பாட்டுடைத்தலைவன் நாள் தொடங்கியே காணவேண்டியிருத்தலான், "மூவகையாய்ச் செய்து" என்பதற்குப் பாட்டுடைத் தலைவனின் நாள்தொடங் கியே இருபத்தேழு நாட்களையும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்யவேண்டுமெனப் பெற்றும்.

மற்றும் சோதிட நூற்களில் மணமக்கட்கு நாட்பொருத் தம் காணும் முறையும், கூட்டாளிப் பொருத்தம் காணும் முறை யும் இத்தன்மைத்தாகவே உள்ளன.

பாட்டியலார் அட்டம இராசி இஃதென்றும், வைநாசிகம் இஃதென்றும், விளக்கிக்கூருத தென்னை யெனின்,

அஞ்ஞான்று சோதிடக்கலை அறியாத புலவர் இல்லாமையானும், சோதிட பாலபாடம் கற்றார்க்கும் அட்டமம், வைநாசிகம் என்னும் இவைகள் நன்கு தெரியுமாகையானும், இப்பாட்டியலும் சோதிடக்கலையின் ஓர் பிரிவு ஆகையானும், அவைகளைப் பாட்டியல் நூலில் விளக்க வேண்டியதின்றென விட்டனர்.

தலைவன் நாள் தொடங்கியே நாட்களை ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்ய வேண்டுமெனும் கொள்கைக்கு ஆதாரமான செய்யுட்கள் வருமாறு:—

இறைவன் பெயர்முதல் எழுத்தை நோக்கி
உறுநா ளிணைமு வொன்ப தாக்கி
ஒருமுன் றைந்தேழ் ஒருமுத் திறத்தினும்
ஒன்ரு வண்ணம் உரைமுதற் சீர்க்கே.

— *இலக்கண விளக்கப் பாட்டியல்.*

தனது நாளிற் பின்னுளும் சார்ந்திடு நாலு மாறும்
வினவி யஎட்டொன் பானும் விருத்தமொன் றில்லைதன்னுள்
இனைய முன் றுடனைந்தா நாள் ஏழாநா ளிவை பொருந்தா
நினையுமிம் முன்றென்பாரு ணோர்படு மூன்று வட்டம்.

— *சூடாமணி நிகண்டு.*

பேர்நாளுற் பவநாளா தன்மு வொன்பான்
பிரித்தொன்று முன்றைந்தேழ் ஆகா தெட்டாங்
கூரிரா சியும்வயினா சிகமு மாகா
.... .... .... .... .... ....

— *சிதம்பரப் பாட்டியல்.*

சொல்லியநாள் முவொன்ப தாகத் துணித்தொன்று
புல்லியமுன் றைந்தேழ் பொருந்தாவாம் — அல்லனவற்
றட்டம ராசி வயினா சியமிவையும்
விட்டொழித்த னன்றெனவே வேண்டு.

— *வெண்பாப் பாட்டியல்.*

உரை ஆசிரியர் கருத்து வேற்றுமை.

இவ்வெண்பாவின் பழைய உரை வருமாறு:— சொல்லிய நாள் இருபத்தேழையும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூருக்கிப்

பாட்டுடைத்தலைமகன் இயற்பெயரின் முதலெழுத்தின் நாளைத் தொடங்கிக் கூறுகளை யெண்ண ஒன்று, மூன்று, ஐந்து, ஏழ் வரிற் பொருந்தா. அல்லாத நாட்களுட் பாட்டுடைத்தலைவன் பெயரெழுத்தின் ராசி தொடங்கி எட்டாம் ராசி நாட்களும் பொருந்தா. வயினுசியமாகிய எண்பத் தெட்டாங்கால் நின்ற நாளும் பொருந்தா.

சிலர் இவ்வுரையை ஆதாரமாக வைத்து நாட்களைப் பாட்டுடைத்தலைவன் நாள்தொடங்கி மூன்று கூருக்காமல் கார்த்திகை முதலாகச் சொல்லிய முறைப்படியே வகுக்க வேண்டுமென்பர்.

மற்றும் சிலர் கார்த்திகையை முன்வைத்தே பண்டைத் தமிழர் நாட்களை எண்ணி வந்தனர் என்பர்.

இவர்கள் இவ்விதம் கருத்துக் கொள்வதற்குப் பாட்டியல் நூலார் கார்த்திகை தொடங்கி நாளை ஆரம்பித்ததும், சொல்லிய நாள் என்னும் தொடருக்குக் 'கார்த்திகை முதலாகச் சொல்லிய நாள்' எனப் பொருள் கொண்டதும், காரணமா மென்ப.

அ, ஆ, இ, ஈ, என்னும் நான்கு எழுத்துகட்கும் உரியநாள் கார்த்திகை யென்றும், உ, ஊ, எ, ஏ, ஐ, என்னும் ஐந்து எழுத்துகட்கும் உரிய நாள் பூராடம் என்றும், ஒ, ஓ, ஔ, என்னும் மூன்று எழுத்துகட்கும் உரிய நாள் உத்திராடம் என்றும், கூறியதால், (அசுபதி, பரணி, கார்த்திகை என்று விண்மின்களை வரிசைபடுத்தி எண்ணுதற்குமாருக) கார்த்திகை, பூராடம், உத்திராடம் என்று எண்ணினுல் என்னும்? சோதிடக் கலையைக் கொலை செய்ததற்கு ஒப்பாமன்றே?

ஆகையால் இவர்களின் கருத்து மிகப்பொருந்தாத கருத்தா மென அறிக.

அங்ஙனமாயின் கார்த்திகை நாளை முன் கூறியதென்னை யெனின், கூறுதும்.

பாட்டியலார் அகரவரிசை தொடங்கி நாட்களைக் கூறப் போந்ததால் அகரத்திற்குரிய கார்த்திகையைக் கூறினரே யன்றி அதன் தலைமைபற்றி யன்றெனத் தெளிக.

மற்றும் முதல்நாள் என்று கார்த்திகைக்குப் பெயரில்லா மையும், மேட இராசிக்குக் கார்த்திகை கடை நாளாய் இருத்தலை யும் இராசிகளில் விண் மீன்கள் நிற்கும் நிலை விளக்கத்துட் காண்க. (மலர் 13, இதழ் 1. பக்கம் 106-ல் காண்க)

இவ்வெண்பாவிற்கு வேறு எவ்வாறு பொருள் கொள்ள வேண்டுமெனின், விளக்குதும்.

வெண்பாவின் உரை விளக்கம்

சொல்லிய நாள் - பாட்டுடைத் தலைவன் பெயரின் முத லெழுத்துக்குரிய தெனச் சொல்லிய நாளை அல்லது அவன் பிறந்த நாளை (சென்மநட்சத்திரத்தை)

துணித்து - நாள் வட்டத்தினின்றும் பிரித்து (இவ்வாறு பிரித்ததைத் தொடங்கி)

முவொன்பதாக்க - நாள் வட்டத்தை ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் ஆக்க

புல்லிய - (ஒவ்வொரு கூற்றிலும்) பொருந்திய

ஒன்று மூன்றைந்தேழ் - முதல் நாள், மூன்ரும் நாள், ஐந் தாம் நாள், ஏழாம்நாள் ஆகிய இவைகள்

பொருந்தா - பொருந்தாவாம்

அல்லனவற்று - அல்லாத பிறவற்றுள் (இரண்டாம் நாள், நான்காம் நாள், ஆரும்நாள், எட்டாம் நாள், ஒன்பதாம் நாள் ஆகிய இவைகளுள்)

அட்டமராசியும் - தலைவன் நாளுக்குரிய இராசிக்கு எட்டாம் இராசிக் கண் நின்ற நாட்களையும்,

வயிஞசிய மிவையும் - தலைவன் நாளுக்கு இருபத்திரண் டாம் நாளையும், தலைவன் நாளின்காற்கு எண்பத்தெட்டாங்கால் நின்ற நாளையும்,

விட்டொழித்தல் - நீக்கிவிடுவது
நன்றுஎனவே - நலம் என்றே
வேண்டு - விரும்பு - என்பதாம்.

இவ்வெண்பா கொண்டு கூட்டுப் பொருளான் அமைந் திருப்பதால் "சொல்லிய நாள் துணித்து முவொன்பதாகப் புல்லிய" எனக்கொண்டு பொருள் கூறப்பட்டது.

ஆக்க என்பது ஆக என இடை குறைந்து நின்றது.

ஈண்டுரைத்த காரணங்களால் நாட்பொருத்தத்தைப் பாட் டுடைத் தலைவன் பிறந்த நாள் அல்லது பெயர் நாள் தொடங் கியே இருபத்தேழு நாட்களையும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்து பொருத்தம் அமைக்க வேண்டுமென ஐயமறக் கொள்க.

பொருந்தும் நாட்களின் பலன்.

இரண்டி ரிரண்டு ஆறுஎட்டொன் பானெனத்
திரண்ட நாளே செல்வம்புகு தரும். —பன்னிருபாட்டியல்.

(இ. போ.) மேற்கூறியவாறு செய்த மூன்று கூறுகளிலும் உள்ள இரண்டாவது நாளும் (அட்டமம், வைநாசிகம் வாராத) நான்காவது நாளும், ஆருவது நாளும், எட்டாவது நாளும், ஒன்பதாவது நாளும் செல்வத்தை உண்டாக்கும்.

பொருந்தாத நாட்களுக்குரிய எழுத்தைப் பாட்டின் முத லெழுத்தாக அமைக்கின் அஃது பாட்டுடைத் தலைவனின் எல்லாச் சிறப்புக்களையும் அழித்து அவனை, துன்பத்திற்குள்ளாக்கும். ஆகையால், பாட்டுடைத்தலைவனுக்குப் பொருந்தும் நாட்களுக் குரிய எழுத்துக்களில் பின் கூறப்புகும் பொருத்தமும் அமைந்த எழுத்தை ஆய்ந்து கொண்டு முதற்பாவின் முதலெழுத்தாக அமைத்தல் கடமை என்றுணர்க.

திருமணவாழ்த்துக் கவிதை தீட்டுவோரும், ஒரு நூலுக்குச் சாற்றுக்கவி ஈவோரும், மற்றும் வள்ளல்கள் மீது தனிப்பாடல் பாடுவோரும், இப்பாட்டியற் கொள்கையைக் கருத்துள் பதித்தல் கடமையாம்.

அடுத்த இதழில் நாட்பொருத்தம் அமைக்கும் முறைக்கு மூன்று உதாரணங்கள் காட்டுவாம்.

—— (வளரும்)

1137-ம் ஞூ, மார்கழி, தை மாதங்களில்
கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
| --- | --- | --- |
| 9229 | ஸ்ரீ முருகக் கடவுள் திருப்புகழ். | தர்மகர்த்தா, தி. கணபதிகார்த்திகேய-முதலியார், காவாலாகுடி. |
| 9230 | சார்த சதக ஸ்தோத்ர ரசமஞ்சரி (நூற்றைம்பது புகழ்பாச்சுவைப் பூங்கொத்து) | ஸ்ரீ காசிகாநந்தஞாநாச்சார்ய சுவாமிகள் வேதாந்த மடம், திருப்பூவணம். |
| 9231 | ஒன்பது துறவியர் பாடிய திருவெம்பாவை, திருப் பள்ளி யெழுச்சி என்னும் அருட்பாமாலை. | ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் வேதாந்த மடம், திருப்பூவணம். |
| 9232 | திரிம்சத் ஸ்தோத்ர ரசமஞ்சரி (முப்பது புகழ்ப் பாச் சுவைப் பூங்கொத்து). | ,, |
| 9233 | தத்துவராய ஸ்வாமிகள் செய்த திருப்பாவை, திரு வெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி. | ,, |
| 9234 | திருப்பூவணம், வேதாந்தமடம், காசிகாநந்தவிசயம். | தமிழ் புலவர் ம. ராஜகோபால் பிள்ளை. |
| 9235 to 58 | திருஞானசம்பந்தர் அருளிய "கோளறு திருப் பதிகம்." | ராம. அரு. அரு. ராம. எஸ்டேட் தருமங்கள், தேவகோட்டை. |
| 9259 & 60 | திருக்குறள் மூலமும், ஓர் பழைய உரையும். | டாக்டர் உ.வே. சா. நூல் நிலையம், அடையாறு மதராஸ் 20. |

| | | |
|---|---|---|
| 9261 | மகாபாரதம் (வியாசர் அருளியது). | அ. லெ. நடராஜன், வானதி பதிப்பகம் மதராஸ் 17. |
| 9262 | திருக்களர் ஸ்ரீ வீரசேர ஞானதேசிகர் புகழ்உரை மஞ்சரி. | காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் வேதாந்த மடம், திருப்பூவணம். |
| 9263 | பதிற்றுப்பத்து (ஆராய்ச்சியுரை). | பண்டிதர் சு. அருளம்பலவனர். |
| 9264 | கம்பராமாயணம் (கிஷ்கிந்தாகாண்டம்). | Dr. உ. வே. சா. நூல்நிலேயம், அடையாறு மதராஸ். |
| 9265 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி. | காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள் [வேதாந்தமடம். |
| 9266 to 73 | திருக்கள்ளில் திருப்பதிகம். | தருமபுர ஆதினம். |
| 9274 to 81 | திருவலிதாயம் திருப்பதிகம். | ,, |
| 9282 to 89 | திருவேற்காட்டுத் திருப்பதிகம். | ,, |
| 9290 to 97 | திருஓத்தூர் திருப்பதிகம். | ,, |
| 9298 to 9301 | தமிழ்ப்பா மஞ்சரி முதற்பாகம் (தெய்வத்துதிப் பாடல்கள்). | கி. வா. ஜகன்னுதன். |
| 9302 to 9306 | தருமையாதினம் கல்விநிலேயங்களின் ஆண்டு அறிக்கை 1960-61. | தருமையாதீனம். |
| 9307 to 19 | திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி, திருப் பாவை. | திருவாவடுதுறை ஆதீனம். |
| 9320 to 23 | திருவிடைமருதூர்த் திருப்பதிகங்கள். | திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்க சுவாமி தேவஸ்தான வெளியீடு. |

---

(தொடரும்)

திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, ... | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, ... | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, ... | 1 00 |
| | ஷ 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | | | |
|---|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 | 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 | 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 | 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 | 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... | 2 | 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 | 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 | 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 | 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 | 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... | 0 | 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 | 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 | 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 | 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 | 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 | 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 | 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 | 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... | 2 | 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... | 1 | 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... | 0 | 50 |
| 56 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... | 0 | 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '62